## உள்ளுறை

சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 14 ‖ சுபகிருது-௵ பங்குனித் திங்கள் 1-ம௳ [14–3–63] ‖ இதழ் 3

# சிதம்பரச் செய்யுட் கோவை

முதுபெரும் புலவர்
ஸ்ரீமத் சிவஞானத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
திருவெண்காடு.

[கட்டுரை 66]

## 10. அருவுருவில்லான்

அருபம், ருபாருபம், ருபம் என்னும் வடசொற்களைத் தமிழில் முறையே அருவம், அருவுருவம், உருவம் என்பது வழக்கம். நடுவில் உள்ள ருபா ருபத்தை உருவருவம் எனல் இல்லை, அருவுருவம் என்பதே மரபு. இவற்றை நன்குணர்ந்து கொள்ளுதல் இன்றியமையாதது. அருபம் - நிட்களம்; பரம். ருபம் - சகளம்; அபரம். ருபாருபம் - சகளநிட்களம்; பராபரம். நிட்களம் அகளம் என்னும் இரண்டும் ஒரு பொருளன.

கடவுளுக்கு இம்மூன்றும் தடத்தருபங்கள். சுவபாவம் அல்ல. சுவபாவம் ஆகிய ருபம் சத்தியஞானருபம். அதுவே

ஸ்வரூபம். ஸ்வரூபம் அல்லாத எல்லாருபங்களும் தடத்தமே. உருவம், அருவுருவம், அருவம் மூன்றும் மாயாகாரியங்களும் ஆகும். ஞானத்தால் அமையக் கொள்வனவும் ஆகும். கடவுளுக்கு உள்ளன எனக் கொள்ளும் உரு, அருவுரு, அரு மூன்றும் அக்கடவுளது ஞானத்தால் அமையக் கொள்வனவே அன்றி மாயாகாரியம் ஆகா. திருக்கோயில்களில், கல், பொன், மணி முதலியவற்றுற் செய்யப் பெற்றுள்ள மாயாகாரியவுருக்கள், எம்பிரான் வடிவமாகப் பாவனையாற் கொள்ளப்படுதலே அன்றி உண்மையில் அவனது வடிவமாகா அவை. பாவனையால் இறைவன் வடிவாகக் கொள்ளப்படும் போதும் அவை அருண் (ஞான) மயமே ஆகும். மாயாமயம் அல்ல. "மாயகாரியவுருக்களும் எம்பிரான் வடிவம் ஆயவேல் அவை அருள்மயமாகும்" என்று காஞ்சிப்புராணத் தவையடக்கச் செய்யுளில், ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவரர் அருளிய உண்மையை இங்குக் கருதுக. சிவஞான சித்தியாரில்,

"மாயைதான் மலத்தைப் பற்றி வருவதோர் வடிவம் ஆகும்
ஆய ஆணவம் அகன்ற அறிவொடு தொழிலை ஆர்க்கும்
நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ணலாலே
காயமோ மாயை அன்று; காண்பதுசத்தி தன்னுல்"

எனவருந் திருவிருத்தத்திலும் இறைவனுக்கு மாயாதேஹம் இல்லை. ஞானதேஹமே உண்டு என்று அறுதியிட்டுரைத் தருளியதும் அறிக. இதில், 'எல்லா ஞானத் தொழில் முதல்' என்பதற்கு விளக்கமாக, "இறைவன் ஆவான் ஞானம் எல்லாம்; எல்லா முதன்மை; அநுக்கிரகம் எல்லாம் இயல்புடையான்" (சித்தியார். 269) என்றதை ஓர்க. இவற்றுள் 'முதல்' என்றது இச்சையை. திருக்களிற்றுப்படியாருரையில் (பக்கம். 64. சிதம்பரம். திரு. முத்து. வைத்தியலிங்கச் செட்டியார்...60 ஆண்டு நிறைவுவிழா நினைவு மலர் வெளியிடு) 'முதல் என்பது இச்சை ஞானம், கிரியை மூன்றில் முதற் கூறிய இச்சையின் மேற்று' 'சிவன் முதலே அன்றி முதல் இல்லை – சிவனுடைய இச்சையை அன்றி நமக்கு இச்சை இல்லை' என்று இருப்பதை உணர்க. 'இச்சை முதலிய எழுப்பி நடத்திடும் விச்சை சாலவும் வியப்பு' என்னும் (இருபா இருபஃது 16) திருவார்த்தையிலும் முதலாவது இச்சை என்றுணர்த்துவது முதலிய பல சான்றுகள் உள்ளன.

'உயிர்கட்கு அநுக்கிரக மாத்திரம் குறித்துப் பொதுவகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்பதாகிய ஞானம் ஒன்றே சிவசத்தி யின் சொருபம். அதுவே பராசத்தி எனப்படும்'(சிவஞான முனிவர் உரை). 'அந்த ஞானம் உயிர்கட்கு மலபாகம் வருதற்பொருட்டு ஐந்தொழில் செய்தலைக் குறித்துச் சிறப்பு வகையான் வியாபரிக்குங் கால், ஒருகூற்ருனே திரோதான சத்தி என நின்று, இச்சா ஞானக் கிரியை என முத்திறப்பட்டு வியாபரிக்கும். ஆகலான், இச்சை கிரியைகளும் ஞானத்தின் வேறு' அல்ல. "நீடு பரா சத்தி நிகழ் இச்சா ஞானம் நிறை கிரியைதர". "கிரியை அறிவு இச்சை கிளந்த சத்தி ஏதோ? பெரிய பராசத்தி எனப் பேசாய்".

'இச்சா ஞானக் கிரியை' என்னும் மூன்றனுள் இடைப்பட்ட ஞானத்திற்கு இச்சை முதல். 'தடையிலா ஞானம்' எனப்படும் பராசத்தியை நோக்கி இச்சை முதலாகாமல் வழி ஆகும். முற் கூறிய முதல் என்றதன் காரணம் இதுவே.

'பராசத்தியாவது தடையிலா ஞானம் எனப் பொதுமையால் ஒன்ருய், இச்சா ஞானக் கிரியை என வியாபார பேதத்தால் மூன்ருய், அவையே மற்றும் அவ்வக் காரிய பேதத்தால் பல திறப்படும். இச்சையே, அதற்குச் செய்யக் கடவ உபாயங்களை யெல்லாம் அறியும் அறிவு. மலத்தை நீக்கிச் சிவத்துவத்தை அளிக்க உள்ளதாகும் கருணை, ஞானம், கிரியை அவற்றை அவ் வாறே சங்கற்பித்துச் செய்யும் சங்கற்பம். இவ்வாறு கடவுளுக் குரிய இச்சா ஞானக் கிரியையை உணர்தல் வேண்டும். கிரியா சத்தியைக் காருண்யம் என்றுரைத் தருளினுர் நிரம்ப வழகிய தேசிகர்.

"ஒன்றதாய் இச்சா ஞானக் கிரியை என் ருெரு மூன்ருகி
நின்றிடும் சத்தி; இச்சை உயிர்க்கருள் நேசம் ஆகும்;
நன்றெலாம் ஞான சத்தி யால்நயந் தறிவன் நாதன்;
அன்றருட் கிரியை தன்ஞல் ஆக்குவன் அகிலம் எல்லாம்".

இதில் 'அருட்கிரியை' என்றது, சாதனத்தொடு கருவி கரணங் களாற் செய்யுங் கிரியை அன்று என்றும் சாதனம் இன்றிச் சங்கற்பத்தால், கருவிகரணங்கள் ஒன்றுமே இன்றி ஞான ருபத்தில் செய்யுங் கிரியை என்றும் உணர்த்திற்று. இவற்றுள்

முன்னது நித்தியம். பின்னது நித்தியம். இதுதான் காலா தீதம். அது காலத்திற்குட்பட்டு அநித்தியமாகும்.

அருவம், அருவுருவம், உருவம் மூன்றும் உருவத்தின் பிரிவே. கண்ணுற் காணப்படும் குடம் உருவமுடையது. அக்குடமே முழுவுருவத்தை அடையுமுன்னர் அருவுருவத்ததாயிற்று. அதன்முன் அருவத்ததாயிற்று. ஆகாயம் முதலியன அருவப் பொருள். நிலம் முதலிய உருவப் பொருள். சந்திரன் முதலியன அருவுருவப் பொருள். எல்லா வுருவும் கண்டிதப் பொருளே. ஆறத்துவாவுட்பட்ட பொருள் எல்லாம் ஆறத்துவாவையும் கடந்த பொருட்குத் தடத்தம் ஆமே அன்றிச் சொரூபம் ஆக மாட்டா. அநாதிமுத்த சித்துருவே நம் கடவுளது. மாயாகாரிய வுருக்களில் பாவிக்கப்படுவதும் அவ்வுருவே. "நிறுத்திடும் நினைந்தமேனி நின்மலன் அருளினாலே" என்றதன் கருத்தை அறிவாரே இதை இனிதுணர்வர்.

முதல்வன் ஆரணங்களையும் ஆகமங்களையும் அருளற் பொருட்டு உருவுகொண்டதும் அருளால் தானே அன்றி மாயை யால் அன்று. ஆரணங்களும் ஆகமங்களும் சொற்பிரபஞ் சத்துட்படுவன. அவற்றைப் பாசஞானத்துட் கொண்டனரே அன்றிப் பதிஞானத்திற் கொண்டாரல்லர். பாசஞானம் ஆகிய வேதாகமங்களும் இறைவனது சொரூபம் அல்ல. பாசம் ஆகிய மாயை இறைவனது சொரூபம் ஆமோ? மாயை சொரூபம் ஆகா தெனின், மாயாகாரியம் எங்ஙனம் சொரூபமாகும்? எவ்வாற்ரு னும் ஆகாது. அதனாற்றான்,

"நாயகன் எல்லா ஞானத் தொழில்முதல் நண்ணலாலே
காயமோ மாயை அன்று; காண்பது சத்தி தன்னால்"

என்று அறுதியிட்டுணர்த்தலாயிற்று.

இறைவனது உருவும் அருள்(ஞானம்), அவ்வுருவில் தோன் றும் தொழில்களும் அருள், குணங்களும் அருள், அவையே இறைவனுக்குக் கரணம். தலை, முகம், இதயம் ஆகிய அங்கம் மூன்றும் அருள். கண், காது, மூக்கு, கழுத்து, மார்பு, தோள், கொப்பூழ், கை, கால், விரல் முதலிய பிரத்யங்கங்களும் அருள். சூலம் முதலிய சாங்கங்களும் அருள். அங்கத்தின் சார்பில் உள்ள துணி, மாலை, பணி, ஆசனம் முதலிய உபாங்கங்களும் அருள்.

'உலகினை இறந்து நின்றது அரன் உரு' 'உலகம் அவன் உருவில் தோன்றி ஒடுங்கிடும்' 'உலகினுக்கு உயிரும் ஆகி உலகுமாய் நின்றது' என்றுணர்த்த 'விசுவாதிகன்' 'விசுவகாரணன்,' 'விசுவாந்தரியாமி' 'விசுவ ரூபி' என்னும் சுருதிகளை உணர்தல் வேண்டும்.

மாயையில் தோன்றி ஒடுங்கும் உலகம், அம்மாயைக்கு ஆதாரமாய் நின்ற முதல்வன் உருவாகிய அருளில் தோன்றி ஒடுங்கியதும் ஆம் எனல் குற்றம் ஆகாது. மாயைக்குத் தாரகம் அருளே. கிழங்கினின்றும் தோன்றிய தாமரையைச் சேற்றிலிருந்து தோன்றிய தெனல்போல்வது அது. பங்கம் – சேறு. பங்கஜம் சேற்றிலிருந்து தோன்றியது.

உபதேச மாத்திரைக்கு வேதாகம ரூபங்கொண்டான். ஐந்தொழில் செய்ய உலகுரு முதலியனவாக உருவம் கொண்டான்.

உருவம் எனப்படும் தூலப்பொருட் கெல்லாம் அருவம் எனப்படுஞ் சூக்கும் அவத்தை நிச்சயம் உண்டு. இது சற்காரிய கிரமம். அருவம் எனப்படும் சூக்குமப் பொருள், பின் உருவம் எனப்படும் தூலாவத்தை எய்தும் போது அவ்விரண்டற்கும் பொதுவாயதோர் அவத்தை (அருவுருவம்) உண்டு.

மறைஞான சம்பந்தர், மரம்போல்வது சகளம் (அபரம்); மரநிழல் போல்வது நிட்களம் (பரம்); பூவும் பூமணமும்போல்வது சகள நிட்களம் (பராபரம்) என்றருளினர்.

சிவாக்கிரயோகிகள் 'அருவுரு' என்றதன் விளக்கம் ஆக எழுதியருளியது இது:– 'கண்ணாடி நிழல் போலக்காண உண்டாய்த் தீண்டுதற்கு இல்லையாயிருக்கும்'. கண்ணாடிநிழலைக் காண்கின்றோம், உருவம் கண்ணிற்குப் புலப்படுதற்குரியது தான். கண்ணாற் பார்க்கப்படும் உருவும் கையால் தொடப்படாத அருவும் உடையது கண்ணாடி நிழல்.

சக்ஷிதீக்ஷை முதலியவற்றின் நிமித்தம் ரூபமும்; தியாநபூஜார்த்தம் ரூபாரூபமும்;உயிர்க்குயிராய் அறிவுக்கறிவாயிருந்து அஞ்ஞானத்தையொழிப்பது குறித்து அருபமும் ஆண்டவன் கொண்டருள வேண்டிற்று.

ஞானப்ரகாசர் இம்மூன்றையும் சலம், அசலம், சலாசலம், ஸ்தூலம், சூக்குமம், பரம் என்றருளினர்.

அருணந்திதேவநாயனர் அருளிய சிவஞான சித்தியாரில் "உருமேனி தரித்துக் கொண்டது என்றலும் உரு இறந்த அரு மேனியதுவும் கண்டோம்"என்றவாறும், உரு இறந்தஅருமேனி தரித்துக் கொண்டது என்றலும் உருமேனியதுவும் கண்டோம் என அதைமாற்றிக் கொண்டதும் போல, இச்சிதம்பரச் செய்யுட் கோவையில் ஆசிரியர் குமரகுருபர முனிவரர் 'உரு எனின் அருவுருவ மும் உள அருவெனின் உருவமும் உள" என்ருர் அந்நாயனர். 'அரு உருவான போது திருமேனி உபயம் பெற்ருேம்' என்றதை உட் கொண்டும்,

'உருவெனின் அருவுருவமும் உள' என்றதாகக் கூறலாம். அநாதிமுத்தசித்துருவே அவனுடைய சொருபம் ஆதலின் இம் மூன்றுருவும் அவனுக்குத் தடத்தமே ஆதலின், அவன் இம் மூன்றும் கடந்தவனும் ஆவன் என்பதை உணர்த்த,

'அவை உபயமும் அல' என்ருர். தடத்தமாகிய மூன்றும் இல்லை என்ருலும் சொருபம் ஆகிய ஞானருபம் என்றும் நீங்கா திருக்கும் என்ருர்.

"அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்
உருவும் உடையான் உளன்" (திருவருட்பயன்.5)

திருவாசகத்தில் 'உருமூன்றும் ஆகி உணர்வரிதாம் ஒருவன்' என்றருளி யதையும் ஈங்குணர்க. இதில் 'உணர்வரிது' என்றது 'அறிஞர்க்கு அறிவாம் உருவைக் குறித்தது. அஃது அறிஞர் (ஞானியர்)க்கே அன்றி ஏனையர்க்கு உணர்வரிது என்னும் உண்மையை மேலால வத்தையின்பயனை உணருமாற்ருலும் தெளியலாம்.

"அருஎனின் உருவமும் உள;உரு எனின்அரு
உருவமும் உள;அவை உபயமும் அல."

உபயம் - இரண்டு. உருவமும் அருவமும் ஆகிய இரண் டும் அல்லைநீ. கந்தர்கலிவெண்பாவில், உருவின்றி நின்றவுரு அருளே ஆய், உருவும் அருவும் உருவருவும் ஆகிப் பருவவடிவம் பலவாய் என்றதும் 'ஞானம் திருவுருவா இச்சை செயலறிவு கண்ணு அருளதுவே செங்கையலரா' என்றதும் உணர்க

(தொடரும்)

# திருவுந்தியார்-விளக்கவுரை

பண்டித வித்துவான், சைவப்புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

[மலர் 14. இதழ் 2-ன் தொடர்ச்சி]

அவன்இவன் ஆனது அவனருளால் அல்ல(து)
இவன்அவன் ஆகான் என்(று) உந்தீபற
என்றும் இவனே என்(று) உந்தீபற 40

(வி-ரை) சிவபரம் பொருள் மானுடச் சட்டை தாங்கி மானிடரை ஆட்கொள்வது அப்பரம் பொருளது அளவிறந்த கருணையினாலேயாம். அது மான்காட்டி மான் பிடிப்பதுபோலாம். அங்ஙனம் மானுட வடிவந்தாங்கினும், அம்மனித உயிர்களுள் ஒன்றென அதனைக் கருதுதல் கூடாது. அதுபோல உயிர்களும் இறைவனது அளவிறந்த கருணையினால் சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி ஆட்கொள்ளப்பட்டபோதிலும் சிவமே எனக் கருதுதல் கூடாது என்பதாம். முத்தி நிலையிலும் இறைவன் ஆண்டானாய் உயிர் அடிமையாய் நிற்பதன்றி, உயிர் இறைவனே யாதல் என்றும் இல்லை என்பது இதன் கருத்தாம்.

'சிவனடியைச் சேரும் முத்தி செப்புவதிங்குயாமே'
என்னும் சிவஞான சித்தியாரும்.

'மண்முதலாம் உலகேத்த மன்னுதிருத் தாண்டகத்தைப்
புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' எனப்புகன்று
நண்ணரிய சிவானந்த ஞான வடிவேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்ட அரசமர்ந்திருந்தார்'

எனச் சேக்கிழார், அப்பர் பெருமான் அடைந்த முத்தி நிலையை விளக்குமாறும் காண்க,

அவன்இவனுய் நின்ற(து) அவனருளால் அல்ல(து)
எவன்அவனுய் நிற்கின்ற(து) ஏழாய்—அவனிதனில்
தோன்றுமரப் புல்லூரி தொல்லுலகில் அம்மரமாய்
ஈன்றிடுமோ சொல்லாய் இது.

என்னும் திருக்களிற்றுப்படியாரும் இத்திருவுந்தியார் கருத்தினை விளக்கி நிற்கும்.

முத்தி முதலுக்கே மோகக் கொடிபடர்ந்(து)
அத்தி பழுத்த(து) என்(று) உந்தீபற
அப்பழம் உண்ணுதே உந்தீபற. 41

(வி-ரை) முத்திபெறுதற்கு முதன்மை யுடைய உயிரினிடத்து ஆணவம் என்னும் கொடிபடர்ந்ததால் உடல் எடுத்தலாகிய பிறவி தோன்றியது. எனவே இப்பிறப்பு நீங்க ஆணவம் என்னும் பழத்தை உண்ணுது உதறி எறியவேண்டும் என்பதாம்.

உயிர் முத்தி பெறுதற்கு உரிமையுடையது ஆதலின் அது 'முத்தி முதல்' எனப்பட்டது. மோகக்கொடி – ஆணவமாகிய கொடி. வளர்ந்து வாழ வேண்டிய கொடியாகிய உயிரை, இவ் ஆணவமாகிய கொடி படர்ந்து அதனை முடி அடக்கிவிடுகின்றது. இதனைப் 'படர்ந்து' என்னும் சொல் நன்கு விளக்குகின்றது. உயிரது மெய்யறிவை ஆணவம் மறைத்துவிடும் என்பது கருத்து. ஆணவமான படலம் கிழித்து அறிவில், காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டி' எனக் குமரகுருபர முனிவரும் இவ்வாணவ மலத்தின் இயல்பினை விளக்குதல் காணலாம். அத்தி - உடல். அப்பழம் - அவ்வாணவமாகிய பழம். உயிரினின்றும் பழுக்க வேண்டியது முத்திப் பழமே யாகும். அங்ஙனமின்றி அது அத்திப் பழத்தைப் பெற்றது. ஆணவ மலத்தினுலாகும். அதனைத் திருவருளாகிய வாளினுல் அறுத்துவிட உயிரினின்றும் பழுக்கவேண்டிய முத்திப் பழம் தடையின்றிப் பழுத்துவிடும் எனக் கூறுகின்ருர் திருக்களிற்றுப்படியார் ஆசிரியர். அப்பாடல் வருமாறு:—

"முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்த(து) அருளென்னும்—கத்தியினுல்

மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்
ஏகக் கொடியெழுங்காண் இன்று''

அண்டம் முதலாம் அனைத்தையும் உட்கொண்டு
கொண்டத்தைக் கொள்ளாதே உந்தீபற
குறைவற்ற செல்வம் என்(று) உந்தீபற. 42

(வி-ரை) அண்டம் முதலிய அனைத்துப் பொருள்களையும் உள்ளடக்கி நிற்கும் மாயையைப்பற்றி நில்லாது; குறைவிலா நிறைவாய இறைவனையே பற்றிநிற்க வேண்டும் என்பதாம்.

'சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய்'

என்னும் திருவாசகமும் இக்கருத்தினை விளக்கி நிற்றல் காணலாம்.

காயத்துள் மெய்ஞ்ஞானக் கள்ளுண்ண மாட்டாதே
மாயக்கள் உண்டார் என்(று) உந்தீபற
வரட்டுப் பசுக்கள் என்(று) உந்தீபற. 43

(வி-ரை) உடலிடங் கொண்டு உயிர்க்குயிராக விளங்கும் இறைவனது திருவடியின்பத்தை அநுபவியாது வாழ்வை உகந்து மடவாரின் வல்வினைப்பட்டு ஆழமுகக்கும் உயிர்கள் பயனற்ற வரட்டுப் பசுக்களை ஒப்பர் என்பதாம்.

சிந்தையி னுள்ளும்என் சென்னி யினும்சேர
வந்தவர் வாழ்கஎன்(று) உந்தீபற
மடவா ளுடனேயென்(று) உந்தீபற. 44

(வி-ரை) என் சித்தத்தே தன்னைவைத்தும், அருளினாலே தாளினைத் தலைமேல் சூட்டியும் ஆட்கொண்டருளிய பெருமான் தமது திருவருட் சத்தியுடன் என்றென்றும் வாழ்க என்பதாம்.

இதுவரை 43 பாடல்களால் உலகிற்கு அருளுரை அருளிய ஆசிரியர், இது காறும் தமக்கு உள்நின்றும் முன்னின்றும் உணர்த்தியருளிய ஞானசாரியனாகிய உமையொரு பாகனை இப் பாடலில் வாழ்த்துகின்றார். பெண்ணில் நல்லாளொடும் பெருந்

தகையிருப்பதால் தான், மக்கள் மண்ணில் நல்லவண்ணம் வாழ இயலுகின்றது. அப்பெருந்தகை அப்பரிசே வந்து அருள் செய்தலால் அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டையும் அவ்வுயிர்கள் பெற இயலுகின்றது. இங்ஙனம் உயிர்கள் அனைத்திற்கும் செய்யும் பெருங்கருணையையும் தமது சிந்தையிலும் சென்னியிலும் சேர இருந்து அருள் செய்த பெற்றியையும் நினைந்தே ஆசிரியர் அந்நன்றியறிதலைக் கூறுமுகமாக அப்பெருமானை இப்பாடலில் வாழ்த்தியருளுகின்றார்.

இங்ஙனமே திருக்களிற்றுப்படியார் ஆசிரியரும் தமது நூலின் இறுதியில் வாழ்த்தி வணங்குகின்றார். அப்பாடல் வருமாறு :—

"சிந்தையிலும் என்தன் சிரத்தினிலும் சேரும்வகை
வந்தவனை மண்ணிடைநாம் வாராமல்—தந்தவனை
மாதினுடன் எத்திறமும் வாழ்ந்திருக்க என்பதலால்
ஏதுசெயி வாழ்த்துவேன் யான்."

வையம் முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தான்உரை உந்தீபற
உண்மை புணர்ந்தார் என்(று) உந்தீபற. 45

(வி-ரை) உய்ய வந்த நாயனாரால் அருளிச் செய்யப்பட்ட இத்திருவுந்தியார் என்னும் நூல் உலகினரைப் பாசமாகிய கடலினின்றும் கரையேற்றும் நீள்புணையாகும். இதனையுணர்ந்தவர்கள் மெய்ப்பொருளை உணர்ந்தவர்களாவர் என்பதாம்.

இத்திருப்பாடலில் ஆசிரியர் தமது பெயரையும், தாம் அருளிய நூலின் பயனையும் அறிவுறுத்தியுள்ளனர்.

கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றுஈண்டு வாரா நெறி'

"வாழி பெருமான் புகழ்கேட்ட வார் செவிகள்"
திருவுந்தியார் விளக்கம் முற்றிற்று.

# THE DOCTRINE OF CREATION IN SAIVA SIDDHANTA

**Mr. P. Mutharasu,** M. A., B. T.

(Continued From Page 103. Vol. XIV)

Now, a question may be asked, when did the Anava Malam take hold of the souls? The answer is very easy. Anavam did not take hold of the soul at a particular point of time, however remote it might be. If it were so, it would follow that the soul was free before and no reason could be advanced for landing a free being under thraldom. Moreover, if a free soul were to be fettered as such what is the guarantee that Anavam will not bind the soul even after libration? If such a contingency arises, there could be no liberation or Moksham worth the name. Therefore, the siddhantin establishes beyond any doubt or apprehension that the soul is beginninglessly bound by Anava Malam.

This Anavam is the root cause that produces likes and dislikes in the souls. They in turn become the causes for their good and bad actions. These form the Moola Karmam which has to be worked out and cleared by the souls. For this purpose, God creates for them from Maya bodily frames, organs of work and knowledge, places and objects of enjoyment. With these aids, souls are able to get over the obstruction of Anavam and they enjoy the fruits of their karma.

We know that if a man toils continuously without rest, he gets exhausted in course of time. He becomes unable to complete the work undertaken by him. If some rest is given he will be able to fulfil his mission. The same is the case with the souls that labour under bondage. If the souls are not given the required rest from time to time, they will not be able to obtain the desired liberation. Hence the acts of destruction, reproduction and preservation have that end in view. It follows, therefore, that the objects of the three-fold changes in the Universe is the liberation of the souls from bondage. The veteran scholar in Siddhanta Philosophy, J. M. Nallasamy Pillai puts the defect of the souls and the purpose of creation very succintly in the following lines: "That man is ignorant in knowledge (சிற்றறிவு) and is imprudent in his actions (சிறுதொழில்) is a fact and is taken as a fact by the Siddhantin and is not converted into a myth or athysayam by a process of verbal jugglery.........If the soul is other than God, other than Maya and is in bhanda or bondage, then the necessity for the creation of the world becomes intelligible".

At this stage, one may be inclined to ask, how all the activities of God may be said to be actuated by Love. In Sivagnana Siddhiar the author beautifully indicates the purpose of each one of the Lord's activities. "Destruction gives rest to the souls. Creation brings about the maturation of Mala through the liquidation of Karma. Preservation ensures enjoyment of the fruits of their action with a view to hasten its liquidation. Obscuration causes the mellowing of Mala through bringing about equanimity with respect to Karma. Bestowal of Grace occasions

the final Release from bondage. So, all the functions of Lord are but His Acts of Grace."*

In conclusion it may also be said that Saiva Siddhanta does not specifically raise the question of first or original creation. We see in Sivagnana Bodham, Meikanda Devar speaks only of recreation of the Universe. As the discussion proceeds from the known to the unknown, we can speak only of recreation and not of first creation. Swami Vivekananda is more emphatic about this than anyother. It is enough to quote his words. "The first is the question of creation, that this Nature, Prakriti, Maya, is infinite without beginning. It is not that this world was created the other day, not that a God came and created the world, and since that time has been sleeping; for that cannot be. The creative energy is still going on. God is eternally creating—is never at rest, (Please note here that God Siva is represented as the Supreme Dancer in all the temples of South India, signifying the incessant activity of God). The whole of this nature exists; it becomes finer, subsides and then after a period of rest, as it were, the whole thing is again projected forward, and the same combination, the same evolution, the same manifestations appear, and remain playing, as it were, for a certain time, only again to break into pieces, to become finer and finer until the whole thing subsides and again comes out. To say, therefore, that it had a beginning, is utter nonsense. No question can occur as to its beginning, or its end."

---

*அழிப்பு இளைப்பாற்றல்; ஆக்கம் அவ்வவர் கன்மம் எல்லாம்
கழித்திடல்; நுகரச் செய்தல் காப்பது; கன்ம ஒப்பில்
தெழித்திடல் மலங்கள் எல்லாம் மறைப்பு; அருள்செய்தி தானும்
பழிப்பொழி பந்தம் வீடு; பார்த்திடின் அருளே எல்லாம்.

Thus, we see, in the Siddhantic doctrine of creation, the most logical position imaginable. The Supremely powerful and All—loving God is ever at work to redeem the completely helpless and all-sinful souls. In order to save these souls, grant them liberation and take them unto His bosom of Bliss, God has created the universe with the third entity or padartha the Maya. "The motive of creation therefore, is the redemption of the numberless souls eternally wallowing in beginningless evil and darkness.... The world is therefore not a 'vale of soul-making' but 'a garden of soul-culture!" We say, therefore, that the doctrine of creation postulated by the Saiva Siddhantin is the most reasonable and least objectionable of all other doctrines.

---

# சிலப்பதிகார ஓரங்க நாடகம்

பன்மொழிப் புலவர், பல்கலைச் செல்வர்,

**உயர்திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள்,**

M. A., B. L., M. O. L.,

தமிழ்க்கலை, மொழிஇயல் துறைத் தலைவர்,

அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

[மலர் 14, இதழ் 1-ன் தொடர்ச்சி]

## கொலைக்களக் காதை

### இரண்டாம் காட்சி

### I–a

இரண்டாம் காட்சி மதுரைத் தெருவில் நிகழ்கின்றது. கோவலன் ஆய்ச்சியர் வீட்டைவிட்டு வெளியேறும்போது ஆயர்கள் வீட்டிலும் ஒருவரும் இல்லை. 'உழையோர் இல்லா ஒரு தனி' நிற்கின்றாள் கண்ணகி. இதற்குக் காரணம் அவனும் அறியான்; நாமும் அறியோம். பின்னே 'ஆய்சியர் குரவையில்' அது விளங்கும். அதனை அடியார்க்கு நல்லார் நமக்கு இங்கே நினைப்பூட்டுகின்றார். கொலைக்களக் காதை நிகழ்ச்சியும், ஆய்ச்சியர் குரவை நிகழ்ச்சியும் ஒருங்கு நிகழ்வன போலும். தீய சகுனங்களைக் கண்டு மாதரி குரவை ஆடவேண்டும் என்று முடிவு செய்கிறாள்; குரவை யாடப்போகின்றாள். ஆதலின் கண்ணகி இருந்த இடத்தில் யாரும் இல்லை. இவ்வாறு துன்பியல் சகுனங்கள் முன்தோன்றி மனத்தைக் குழப்புவதைக் காண்கிறோம்.

### b

துன்பத்தோடு கோவலன் தெருவழியே போகின்றான். துன்பத்தால் எழுந்த கலக்கம் அவனாலே நடக்க முடியாதபடி இவ்வாறு அவனைச் செய்து விடுகின்றது. 'வல்லா நடையின்

மறுகில்' செல்கின்ருன். எதிரே ஒரு முசுப்புள்ள எருது வரு கின்றது. இஃது ஒரு தீய சகுனம். ஆனுல் இதனைத் தீய சகுனம் எனக் கோவலன் அறியான். இடையர்கள் இடையே மட்டும் தான் இதைத் தீய சகுனமாகக் கொள்ளும் வழக்கம் வழங்கி வந்ததுபோலும். ஆயர் சேரியைத் தாண்டுகிருன். 'மாதர்கள்' என்று புகழப் பெறுகின்ற தளிப்பெண்களின் சேரியையும் கடந்து செல்கிருன்.

கடைத்தெருவை அடைந்து நடக்கின்ருன். அங்கேதான் பொற் கொல்லன் முதன் முதலாக வருகின்ருன். நூறு தட்டார்கள் பின் வர அவன் முன் வருகின்ருன். உருக்குத் தட்டார், பணித் தட்டார் என்ற பலவகையான தட்டார்களுக்கும் அவன் தலைவன் என்பது தோன்றுகிறது. அரசன் கொடுத்த மெய்ப்பைக்குள் புகுந்து தோன்றுகின்ருன். தன்னுடைய தொழிலுக்கு அடையாளமாகக் கைக்கோல் ஒன்று ஏந்தியிருக் கின்ருன். இங்கே கைக்கோல் கொடிறே ஆம். இவ்வளவு வரிசையோடு வந்தாலும் தன் இழிதகைமை அறிந்தான் போல் உயர்ந்தோர்வரின் வழிவிட்டு விலகி நடக்கின்ருன். "இவனைக் கண்டதே தீய சகுனம் என்பது தோன்றுகின்றது" என்கிருர், அடியார்க்கு நல்லார். ('பின்வர முன் கண்டனனுகி என்ற அடிக்குப் பொருள் கூறுகின்ற பொழுது இவ்வாறு கூறு கின்ருர்.) இவன் தோற்றத்தைக் கண்டவுடன், இவன் பாண்டிய னுலே பரிசு பெற்றுப் 'பாண்டியக் கொல்லன்' எனச் சிறப்பிக்கப் பெறுபவன் எனக் கோவலன் உணர்கின்ருன். தான்விற்க வந்த சிலம்பை விற்பதற்கு இவன் உதவுவான் என்று எண்ணி அவன் அருகே கோவலன் செல்கிருன்.

c

இது வரையில் கூறிய அனைத்தையும் பாத்திரப் பேச்சுக் களாகவன்றி நிகழ்ச்சியின் விளக்கக் குறிப்புக்களாகவே புலவர் அமைத்துள்ளார்.

II - a

இதன்மேலேதான் பாத்திரப் பேச்சு ஒன்று தொடங்கு கிறது. அரசனின் தேவிக்கே அணியத் தக்க காலணியை நீ

விலைவைக்க வல்லாயா? என்று அவனைக் கோவலன் கேட்கிறான். புகாரில் உயர் மக்களோடு பழகிய பழக்கத்தில் கொல்லனை ஒருமையில் பேசி இவ்வாறு கேட்கிறான். கொல்லனோ பணிவுடன் 'அடியேன் அறியேன்' என்கிறான். அரசியின் காலணி என்றதும் அவனுடைய குற்றம் உள்ள நெஞ்சு குறுகுறு என்கிறது. இதனாலேயே அரசியின் காலணி என்ற சொற்களைக் கேட்டதும் அவன் அடிமனம் 'அறியேன்' என்றது. ஆனால் தன்னுடைய திடுக்கிடு ஒன்றும் வெளித் தோன்றாதபடி அடக்கத்தால் கூறிய சொற்கள் போல அதனை மாற்றிக்கொண்டு, 'ஆயினும் வேந்தர் முடி முதற் கலன்கள் அமைப்பேன் யான்' என்று கூறுகின்றான். பெண்கள் அணியினைச் செய்யாமற் போனாலும் அரசன் திருமுடி முதலியன செய்வதே என்னுடைய வழக்கம் என்று தன் பெருமையைக் கூறிக்கொண்டு, தன் தொழில் முறைக்கு வளம் தேடப் பார்க்கிறான். 'அரசியின் காலணி' என்ற சொல்லைக் கேட்டதும் அவன் மூளை வேலை செய்யத் தொடங்கியதுபோலும். தான் திருடிய சிலம்புபோல் ஒருவேளை கோவலன் கொண்டு வரும் சிலம்பு இருக்குமோ என்று மனப்பால் குடிக்கின்றான் போலும். அப்படியானால் திருட்டை மறைத்து வேறொருவனைத் திருடனாக்கி விடலாம் என்றும் அவன் மனம் எண்ணுகிறது போலும். எனவே கோவலனிடம் நம்பிக்கை ஊட்டுவதற்காகக் கைகூப்பித் தொழுகின்றான்.

b

ஆனால் அவனுடைய மனத்தே ஓடுகின்ற எண்ணத்தை அறிந்தவர் போல 'கூற்றத் தூதன்' என்று புலவர் அவனைத் தம் வினைக்குறிப்பில் சுட்டி விடுகின்றார். புறநிலைப் போக்கிற்கு (objective) இவ்வாறு புலவர் கூறுவது பொருந்தாததேயானாலும் இதை இவருடைய நாடகக் காப்பிய நடையின் போக்கு எனக் கொள்ளவேண்டும். இந்தக் கொல்லனது முழுவடிவத்தையும் நாடகப் பாங்கில் அமைத்தற்குப் போதிய இடம் புலவர் உள்ளத்தே இல்லை. ஆதலின் அவனுடைய இயல்பைப் பிறர் சொல்லாலோ அவன் செயலாலோ முழுவதும் காட்டாமல் தம்முடைய குறிப்பினாலேயே ஆசிரியர் விளக்க முற்படுகின்றார். பொற்கொல்லனை இக்காப்பியத்தில் எதிர்நிலைத் தலைவனாக அமைப்பதற்கு அவர் மனம் ஒருப்படவில்லை. ஊழின் கையாள்

ஆகவே அவர் கண்ணில் அவன் தோன்றுகிறன். அவனுடைய பேச்சை நாடகமாக நடிக்க விரும்புவோர் என்ன குறிப்போடு நடித்தல் வேண்டும் என்பதற்கு வாய்ப்பான நாடகக் குறிப்புக்கள் சில தருகின்றார் ஆசிரியர். 'கூற்றத் தூதன் கைதொழுது ஏத்தல்' 'பொய்த்தொழிற் கொல்லன் புரிந்துடன் நோக்கல்' முதலியவற்றை அவர்கள் உணர்தல் வேண்டும்.

c

இந்த நூலுக்கே பெயர் கொடுத்த சிலம்பினை இதுவரையிலும் சிலம்பு என்ற ஒரு பெயராலேயே அறிந்து வந்திருக்கிறோம். அதன் சிறப்பினை அறியத்தக்கவன் பொற்கொல்லன் ஒருவனே. ஆதலின் அவன் கண்டு வியக்கின்ற நிலையில் அவன் கண்ட காட்சியாக அதனைப் புனைந்துரைக்கின்றார் ஆசிரியர். பொற்கொல்லன் தொழுது ஏத்தியதும், போற்றுவதற்கரிய அந்தச் சிலம்பினைக் கட்டிவந்த பொதிவாயைக் கோவலன் அவிழ்த்துக் காட்டுகின்றான். கொல்லன் அதன் வேலைப்பாட்டை எல்லாம் பார்க்கின்றான். அதனுள் மாணிக்கம் நடுநாயகமாக விளங்குகிறது. வரிசையாக வயிரமும் பதிக்கப் பெற்றுள்ளது. மணி அழுத்தும் குழியில் இவை பதிக்கப் பெற்றுள்ளன. சிலம்போ பசும்பொன்னால் ஆகியது. புடைபட்டு விளங்கும் இச்சிலம்பின் குடைபட்ட உள்ளிடத்தே அரிக்கற்கள் ஒலித்தன. சித்திரத் தொழிலை உடைய இச்சிலம்பின் வேலைப்பாட்டையெல்லாம் நோக்குகின்றான் கொல்லன்.

d

அவனோ பொய்த்தொழில் வல்லவன். அவன் பார்வை சிலம்பைத்தான் நோக்கியிருக்கின்றது. ஆனால் அந்தப் பார்வையில் வேறொன்றையும் காட்டுகிறார் ஆசிரியர். குற்றம் இல்லாதவன் மேல் குற்றத்தைஏற்றுதலை 'இடுவந்தி கூறுதல்' என்பர். 'இடுவந்தி கூறுதலை'த்தான் அவன்புரிந்து நோக்கிக் கொண்டிருந்தான். ஆனால் வெளியார்க்கோ சிலம்பினை நோக்குவது போலத் தோன்றுகிறது. அவன் அந்தச் சிலம்பின் வேலைப்பாட்டையோ கோவலன் விரும்பியபடி அதன் விலையையோ பார்க்கவில்லை. 'இடுவந்தி' கூறுவதற்கு ஏற்றபடி இப்போது எதிரே உள்ள சிலம்பு, முன் தான் திருடிய சிலம்போடு எவ்வளவு

ஒத்திருக்குமென உள்ளத்திலே உடன் வைத்து நோக்குகிறான். முதலில் அவன் கண்ட ஒற்றுமை அவன் ஆசையைத் தூண்டியதால் அதனை முழுவதும் ஒப்பு நோக்கி நிற்கின்றான்.

e

அவனுடைய வஞ்சனை முழுவதும் உள்ளத்தில் பழுத்தவுடன் 'கோப்பெருந்தேவிக்கல்லது வேறு ஒருவரும் இதைப்பற்றிக் கேட்பாரில்லை; வேறொருவருக்கும் இது பொருத்தம் இல்லை' என்று கோவலனிடம் முடிவு கூறுகின்றான். அரசனிடம் தானே சென்று இதனைப்பற்றி முடிவு செய்வதாகக் காட்டிக் கொண்டு முன்வருகிறான். 'வேந்தனுக்கு இதனை நான் தெரிவித்து முடிவு செய்து வருகின்றவரையில் என் சிறு குடிலில் அமர்ந்திருங்கள்' என்று அடக்கமாகக் கேட்டுக் கொள்கிறான்.

f

கோவலனும் அதிலே இருக்கின்றான். நாணயம் பதிப்பிக்கும் அச்சசாலை உள்ள தேவகோட்டையின் மதிலுக்குள் புகுந்திருக்கின்றான். கொல்லச்சேரியில் அச்சசாலை பண்டைக் காலத்தில் இருப்பது வழக்கம் போலும். சமுதாயத் துறைகள் எல்லாவற்றோடும் சமயத் தொடர்பு விளங்கியதால் அச்சசாலை தேவகோட்டமாகவும் அமைந்தது என அறிகிறோம். அச்சசாலை கட்டும் காவலுமாக இருத்தல் இன்றியமையாதது; ஆதலின் மதுரைச் சிறை எனக் கூறுகின்றார் ஆசிரியர். அங்கே தான் கோவலன் தங்கி நிற்கிறான். சிறை என்ற குறிப்பின் ஆழத்தைக் காணுதல் வேண்டும்.

g

கொல்லன் தனக்குள்ளே பேசிக்கொள்வதை ஆசிரியர் காட்டுகின்றார். 'மறைவாக வஞ்சித்துத் திருடிய அரசியின் சிலம்பைப் பற்றிய திருட்டுச் செய்தி எல்லோரும் அறிவதற்கு முன்-அறிந்தோர் அரசனுக்குத் தெரிவிப்பதற்கு முன்-இது ஒரு வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இந்தச் சிலம்பினை அரசனுக்கு நானே காட்டுவேன்: கோவலன் பேசிய பேச்சிலிருந்தும் அவனுடைய நடத்தையிலிருந்தும் அவன் வெளியூரிலிருந்து புதிதாக இந்த ஊருக்கு வந்தவன் என்று தெரிகிறது. இந்த ஏமாந்தவனைக்கொண்டு எனக்குவரும் பழியை நான் நீக்கிக்கொள்வேன்'

எனப் பேசிக்கொள்கிறான். 'போக்குவன் யான்' என்பதே அப் பேச்சு. 'யான்' என்பதிலிருந்தே எல்லாவற்றையும் காண்கி றோம். எந்தத்தீமைக்கும் மனங்கலங்காதவன் என்பது அப்பேச்சி னூடே நன்றாக விளங்குகிறது. ஆனால் அந்த இயல்பு ஒரு சிறி தும் வெளியார்க்குத் தோன்றாதபடி நல்லவன் போல நடந்து செல்கின்றான். இதனோடு தெருவில் நிகழும் இரண்டாங் காட்சி முடிவடைகிறது.

## III

இங்கே இதனுள் கோவலன் பேச்சும், அதற்குக் கொல்லன் தரும் விடையும், பின் கொல்லன் தனக்குள் பேசும் பேச்சும் நாடகப் பேச்சுக்களாக அமைந்துள்ளன. மற்றவை எல்லாம் காட்சியின் அமைப்புக் குறிப்புக்களாகவும், செய்திக் குறிப்புக் களாகவும் அமைந்துள்ளன. இவை ஒவ்வொன்றையும் பொருத் தமான இடத்தில் எடுத்துக் கூறுகின்ற தகுதிப் பாட்டையும் காண்கிறோம்.

## IV

கொல்லனுடைய பாத்திரத்தின் ஆழம் ஒரு சிறிதே இங்கு தோன்றுகிறது. பொதுவான நிலையில் அதனை நாம் உணர் கிறோம். இதனுடைய முழு ஆழத்தையும் அகலத்தையும் பின் வரும் செய்திகளிலிருந்து நாம் நன்கு அறியப் போகின்றோம். அடுத்த காட்சி அரசனின் அரண்மனைக்குள் நிகழ்கிறது.

---

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 14, இதழ் 2-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

28 ஒருவனாயுலகேத்தநின்றநாளோ
வோருருவேமுவுருவமானநாளோ
கருவனாய்க்காமனைமுன்காய்ந்தநாளோ
காமனையுங்கண்ணழலால்விழித்தநாளோ
மருவனாய்மண்ணும்விண்ணுந்தெரித்தநாளோ
மான்மறிக்கையேந்தியோர்மாதோர்பாகந்
திருவினாற்சேர்வதற்குமுன்னோபின்னோ
திருவாரூர்கோயிலாக்கொண்டநாளே.

The singer, standing at the shrine of Tiruvarur (Arur) in the Tanjore district, muses over the ancient connection of his lord with the holy place, suggesting that it began before the creation, before Siva wrought his greatest marvels, perhaps even before the one Supreme, Isvara, expanded into the triad Brahma, Vishnu and Rudra.

---

28 When was that ancient day our Lord
Chose Arur should His temple be?
Was't when He stood'mid praising worlds
Alone, or when the One grew three?
Was't when in wrath He burned up Death,
Or turned on Lust His flaming eye?
Or when creative, immanent,
He called to being earth and sky?
Was't when, his young deer in his hand,
He came, with Uma as His part?
Or ere He joined that lady fair
Took He our Arur to His heart?

---

இராகம் : பிஹாக் தாளம் : ஆதி

பல்லவி

உன் அடிமை அன்றோ முருகா
என் குறை தீர்த்தருள்வாய் சண்முகா (உன்)

அநுபல்லவி

ஏனின்னும் தாமதம் எளியேனுக் கருள்தர
வேணுமென்று வேண்டியும் வேலனே அறியேனே (உன்)

சரணம்

சிறியேன் பிழைபொறுத்து எனக்கருள்தர இன்னும்
மனமிரங்காத உன்நிலை அறியேனே
மறவாமல் என்துயர்போக்கி எனைஆள
தருண மிதுவே சொன்னேன் தயாளனே தயைபுரி (உன்)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணார்பேட்டை, திருநெல்வேலி-3.

# அப்பர் அருளிய அமுதம்

**திருமதி. ப. அமிர்தம் அவர்கள்**
தமிழ்த்துறை
ஸ்ரீ சாரதா கல்லூரி, சேலம்.

இன்பம் பெருக்கும் இசைத் தமிழில் தெய்வத் தன்மை பொருந்திய தேவாரப்பாக்களைச் செய்தருளிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய சைவ சமயப் பெரியார்கள் செயற்கரிய செயல் பல புரிந்து சமய உலகில் புதுமை கண்டவர்கள். நாளும் இன்னிசையால் நாதன் தாள் பரவிப் பாடிய அப் பாக்கள் உள்ளத்து இருள் போக்கி, அருள்நெறி காட்ட வல்லன. இசையாய், இசைப்பயனாய் நின்றிலங்கும் இறைவனை அவ்விசைப் பாக்களாலேயே வழுத்தி இன்புறுத்திய தோடு, நாட்டில் மங்கிக் கிடந்த தமிழுணர்ச்சியைப் பொங்கி யெழச் செய்தனர் நாயன்மார்கள். வேற்றவர் ஆட்சியால் மாற்றுருவம் பெற்றிருந்த தமிழ்க்கலை, மொழி, பண்பாடு இவற்றை ஏற்றமுறச் செய்தனர். செம்மேனி எம்மானின் திறம் வியந்து, அவன் திருவருட் பேற்றினை விழைந்து பாடிய அப் பாக்கள் சீர்கேடுற்ற சமுதாயத்திற்குச் சிறந்த வழிவகுக்கும் செந்தமிழ்ப் பாக்களாய்த் திகழ்கின்றன.

தேவார நாயன்மார் மூவருள்ளும் தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திருவாமூரில் தோன்றிய திருநாவுக்கரசர் புறச்சமய நெறி நின்று பொல்லாத சூலை நோய்க்காளாகி அல்லற்பட்டு, ஆற்றாது, பிறையுடைக் கண்ணியான் திருவடியைச் சரணடைய 'தன்னையடைந்தார் வினை தீர்க்கும் தண்ணளியான்' அருள் காட்டி, அன்பு நெறி காட்டி நின்றான். அவன் அருள் பெற்ற நாவரசர் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னும் பதிகம் பாடித் தம் முதிர்ந்த அனுபவங்களையும், ஆற்றாமையையும் புலப்

படுத்தினர். இன்னும் நாமார்க்கும் குடியல்லோம் என்றெடுத்து, நான் மறையின் கோமானை நதியினுடன் குளிர்மதி வாழ் சடையானைத் தேன்மாலைச் செந்தமிழின் செழுந்திருத்தாண்டகம் பாடிச் சிந்தை குளிரச் செய்த அவர் 'தாண்டக வேந்தர்' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்ருர்.

பெற்றம் ஊர்ந்த பெம்மானின் திருநாமத்தை நவில மறந்தறியாது, "புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே வழுவாதிருக்க வரந்தர வேண்டும்" எனத் தம் உள்ளக் கருத்தைப் புலப்படுத்தித் "தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்' எனத் தமிழ் மொழி மீது கொண்டுள்ள ஈடுபாட்டினையும் புலப்படுத்துகின்ருர். சிந்தைக்கண் சிவமாய் நின்று இன்புறுத்தும் இறைவனை, 'எண் அவன்காண்; எழுத்தவன் காண்; இன்பக் கேள்வி இசையவன் காண்! என்று பாராட்டி மகிழ்கிருர். சேக்கிழார் பெருமானும் இவரைத் 'தமிழிறையோர்', தமிழ் மொழித் தலைவர்' எனப் பாராட்டுகின்ருர்,' இவை, நாவரசர் இனிய இசைவல்ல செந்தமிழ்ப் பெருநாவலர் என்பதைக் காட்டும். நாளும் இன்னிசையால் நாதன் தாள் பரவிய ஞான சம்பந்தரும்' 'முத்தமிழ் விரகர்' 'நற்றமிழ் ஞான சம்பந்தன்' 'முத்தமிழ் ஞான சம்பந்தன்' எனத் தம்மைக் கூறி முத்தமிழ் வளர்ச்சியில் தமக்கிருந்த பேரார்வத்தைக் காட்டுகின்ருர். இவ்வாறு இவ்விருவரும் தம்மைத் தமிழோடு இணைத்துப்பாடி மகிழ்ச்சியுறுவது, தம் காலத்தில் வாழ்ந்த மக்கள் அயல் மொழி மீது மையல் கொண்டு தமிழ் உணர்ச்சி குன்றியிருத்தலைக் கண்டு அவர்கட்குத் தமிழார்வமும், தமிழ்ப் பற்றும் உண்டு பண்ணுதற் பொருட்டே எனலாம். கல்வியும் ஏனைக் கலைகளும் ஒருங்கே வளர்க்கும் கலைக்கோயில்கள் பல தோன்றுவதற்குக் காரணமாய் விளங்கியவர் நாவுக்கரசர். மொழியும் கலையும் தம் விழியெனக் காத்து நின்றவர்களுள் ஒருவராகிய அப்பர் பெருமான் மக்களிடையே காணப்படும் சாதி, இனப் பாகுபாடுகளைக் களைந்தெறிவதிலுள்ள ஆர்வத்தையும் தம் பாடலில் வெளிப்படுத்துகின்ருர். புத்துணர்வு கொண்டு புதுமைப் பொலிவு பெற்றுத் திகழும் இன்றைய மக்களிடையிலும் சாதி, குலம், கோத்திரம் இவற்றின் பெயரால் வேற்றுமைகள் தோன்றிப்

பிணக்கும், பூசலும் மலிந்து கிடப்பதைப் போன்ற இழிநிலை, அன்றும் நாட்டில் நிலவியிருக்க வேண்டும். அவ்விழிநிலை களைந்தெறியப்பட வேண்டுமென்ற கருத்துடையராய்ச்,

"சாத்திரம் பலபேசும் சழக்கர்காள்
கோத்திரமும் குலமும் கொண்டுஎன் செய்வீர்"

என இடித்துரைத்தும், அங்கமெலாம் குறைந்தழுகு தொழு நோயராய் ஆவுரித்துத் தின்றுழலும் புலையராயினும் மெய்யன் புடைய இறைவன் அடியார்களாயின், அவர்களே தாம் வணங் கும் கடவுளெனக் கூறியும் சாதி, குலம், உயர்வு, தாழ்வு இவற்றால் விளையக்கூடிய பூசல்கள் நீங்க வேண்டுமென வலியுறுத்துகிறார்.

'இன்றுளார் நாளையில்லை' என்னும் பொருள் ஓராதிருக்கும் நெஞ்சினை முன்னிலைப் படுத்தி 'மதியால் இந்த அனைத்துலகும் ஆளலாம் என்று பேசும் ஆங்காரம் தவிர் நெஞ்சே' என்றும், 'மலையே வந்து வீழினும் மனிதர்காள்! நிலையில் நின்று கலங்கப் பெறிர்!' என்று அறிவுறுத்தியும் 'என்பொன் ஈசன் இறைவனென்றுள்குவார்க்கு அன்பனாயிடும் அண்ணலை இராப்– பகல் ஏத்துவீராயின் துன்பமின்றித் துயரின்றி என்றும் நீர் விழையும் இன்பம் கிட்டும்; அப்போது அல்லல் இல்லை; அருவினை தானில்லை' எனும் அமுதப் பொன்மொழிகளை வழங்கி- யும் திண்ணரிய நெஞ்ச முடையராய், அறிவு கொளுத்தும் ஆசானாய் விளங்குகின்றார்.

இனி, பொய்யன்பு கொண்டு புறத்தே தொழுது நிற்கும் பொக்கமிக்கவர் தம் செயலைக் கடிந்துரைப்பார். 'வாயொன்று சொல்லி, மனமொன்று சிந்தித்து, நீயொன்று செய்யல்' என்ற படி பொய்யன்பு பூண்டு புறவேடம் தரித்து பூவும் நீரும் கொண்டு பூசனை செய்பவர்தம் போலிச் செயல் கண்டு, நெக்கு நெக்குருகி நினைப்பவர் நெஞ்சுளே புக்கு நிற்கும் புண்ணியன் நாணி நகையாடுவாராம். அகத்தினில் அளவு படாததோர் அன்புகொண்டு வழிபடுதலின்றி, பட்டினி கிடப்பதனாலும், குன்றம் ஏறிக் கடுந்தவம் புரிவதனாலும் நீரில் மூழ்கி நீதி நூல் பலவற்றை நித்தம் பயில்வதனாலும் பண்ணிடைத் தமிழும்,

பழத்தினில் சுவையும் கண்ணிடை மணியுமாய் விளங்கும் இறைவனின் இன்னருள் பெற முடியாது என்பதனை,

“நன்று நோற்கிலென் பட்டினி யாகிலென்
குன்றம் ஏறி இருந்தவம் செய்யிலென்
சென்று நீரில் குளித்துத் திரியிலென்
என்றும் ஈசன் என்பார்க்கன்றி இல்லையே”

என எடுத்துரைப்பார்.

“பாலிற் படு நெய்போல் மறைய நிற்கும் மாமணிச் சோதி யான் நினைப்பவர் நெஞ்சமே கோயிலாகக் கொள்பவன். எனவே அன்போடுருகி அகங்குழைவார்க்கு அவனருள் எளிதில் கிட்டும். சிந்திப்பார் சிந்தையில் முந்தித் தோன்றும் முதல்வன் அல்லனே? எவ்வண்ணம் ஏத்தினாலும் அவ்வண்ணத்தில் நின்று அருள் புரிவான். ‘ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோன்றும்’ என வேண்டு வோர் மனத்து விரும்பிய வடிவினனாய் விளங்கும் திறம் வியந் துரைப்பார்.

பாம்பின் வாய்த் தேரை போலப் பலபல நினைக்கின்ற மனத்தினை ஒருமைப்படுத்தி உண்மை அன்பு பூண்டு காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக, வாய்மையே தூய்மை யாக, மனம் அணி இலிங்கமாக, நேயமே நெய்யும் பாலாய் நிறைய நீர் அமைய ஆட்டிப் பூசனை புரிவோருக்கு இவ்வுலகத் தில் அஞ்சத்தக்கது யாதொன்றுமில்லை; அவர்கள் வானம் துளங் கினும், மண் கம்பமாயினும், தானம் துளங்கித் தலை தடு மாறினும் ஒரு சிறிதும் அஞ்சாது ‘அப்பனார் உளர் அஞ்சுவது என்னுக்கே’ என்னும் குறிக்கோளுடையவராய்த் திகழ்வர் என்றும், பொய்மை அன்பின் புன்மையையும், அகவழிபாட்டின் அருமையையும் அழகாகக் கூறி மனவிருள் களையும் வழிகாட்டி ஒளிகூட்டிச் செல்கின்றார்.

இப்படி வாழ்த்த வாயும், நினைக்க மடநெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை மனம், மொழி, மெய்களால் வாழ்த்திய திருநாவுக்கரசரும், மற்ற நாயன்மார்களும், ஆழ்

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# மகாசிவராத்திரி

தேவார இசைமணி, திரு. S. சங்கரநாராயணன் அவர்கள்
ஸ்ரீ கண்டேசுவரசுவாமி தேவஸ்தானம், தாமரங்கோட்டை,
பட்டுக்கோட்டை தாலுகா.

---

நம்முடைய நாட்டிலே மாதந்தோறும் ஆலயங்களில் ஏதாவது விழாக்கள் நடைபெற்றுக் கொண்டு வருகின்றன. அப்படி நடைபெறும் விழாக்காலங்களில் மக்கள் விரதங்களை அனுட்டிப்பதும் வழக்கமாக இருந்து வருகிறது. திருமால், சிவபெருமான், முருகன், விநாயகர், தேவி இவர்களைக் குறித்து மார்கழியில் வைகுண்ட ஏகாதசி, மாசியில் மகா சிவராத்திரி, ஐப்பசியில் கந்தசஷ்டி, ஆவணியில் விநாயகசதுர்த்தி, புரட்டாசி யில் நவராத்திரி இவைகள் கொண்டாடப் பெறுகின்றன. சிவ ராத்திரி என்பதில் சிவ என்பதற்குத் துன்பத்தை அழிக்கிறது என்றும், இராத்திரி என்பதற்குச் சுகத்தைக் கொடுக்கிறது என்றும் பொருள்படும். ஆதலின் சிவராத்திரி விரதம் அனுட்டித்தால் துன்பம் நீங்கி இன்பம் அடையலாம். சிவராத்திரியைப் பற்றி இரண்டு புராண வரலாறுகள் உண்டு. ஒரு காலத்தில் எல்லா உயிர்களும் அழிந்துவிடும்; அதைப் பிரளயம் என்பர்;

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

வார்களும் தத்தம் அனுபவங்களைக் கூறித் தம் நிலை குறித்து இரங்கிக் கூறுவனவும், கடிந்து கொள்வனவுமாக அமைந்த பாக்களனைத்தும் தத்தம் நிலை குறித்து மட்டும் இரங்கிக் கூறு வனவாகவோ, கடிந்து கொள்வனவாகவோ அமையா. அவை யனைத்தும் மக்களனைவருடைய நிலைக்கும் இரங்குவனவாகவும், கடிந்துரைப்பனவாகவுமே அமையும். இதனை உணர்ந்து நாமும் அவற்றை உளம் ஒன்றி ஓதி யுணருவோமானால் மக்களிடையே பண்பாடு வளரும்; மொழியும் வளம் பெறும்; சமுதாயமும் சீர் திருந்தும்; இறையருள் பெருகும்.

---

உயிர்கள் எல்லாம் கடவுளிடம் ஒடுங்கி விடும்; இறைவன் ஒருவனே இருப்பன். அக்கடவுளின் அம்சமான சக்தியே உமாதேவி; அருள்வடிவினள்; அன்பு மயமானவள்; உயிர்களுக்கு இரங்கி, சிவபெருமானை நோக்கித் தவம் கிடந்தாள். இறைவன் 'யாதுவரம் வேண்டும்' என்று வினவ, 'எம்பெருமானே! அடியேன் இந்த இரவு முழுவதும் உம்மைப்பூசித்தேன்; ஆதலின் இது சிவராத்திரி எனப்படவேண்டும்; இந்நாளில் தங்களை வழிபடும் உயிர்கள் எல்லாம் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் அடைதல் வேண்டும்' என்று தேவியார் விண்ணப்பித்தார். இறைவனும் அப்படியே யாக என்று அருள் புரிந்தார். அழிந்த உயிர்கள் எல்லாம் தோன்றி உய்யும் வகையை நாடின. இது சிவராத்திரியைப் பற்றிய ஒரு வரலாறு. ஒரு பிரளயத்தில் உலகமே மறைந்து விட்டது; காத்தற் கடவுள் உலகத்தை உயர்த்தி நிறுத்தினர்; படைத்தற் கடவுள் உயிர்த் தொகுதிகளைப் படைத்தார். இவ்விருவருக்குள் யார்பெரியவர் என்ற வாதம் உண்டாயிற்று. சிவபெருமான் இவ்இருவர் முன் ஒரு பெருஞ்சோதியாய்த் தோன்றினர். இருவரும் சோதியின் அடி முடிதேடிக் காணமுடியவில்லை. இறைவன் தோன்றி "உங்கள் முன்சோதியாய்நின்ற இந்த இரவே சிவராத்திரியாம்; இந்த மாசிமாதம் கிருஷ்ணபட்சம் சதுர்த்தசி திதியில் நம்மைவழிபடுவோருக்குச் சகல நன்மைகளும் கிடைக்கும்; முன்பு பார்வதி தேவியாரும் தவம் கிடந்து வரம் பெற்ற நாளும் இதுவே" என்று திருவாய் மலர்ந்தருளினர். சோதிமலை தோன்றிய இரவே சிவராத்திரி யாகும் என்பது மற்றொரு வரலாறு.

சிவராத்திரி ஐந்து வகைப்படும். அவை நித்திய சிவராத்திரி, பட்ச சிவராத்திரி, மாத சிவராத்திரி, யோக சிவராத்திரி, மாக சிவராத்திரி அல்லது மகா சிவராத்திரி என்பன. ஓர் ஆண்டிலே பன்னிரண்டு மாதங்களிலும் வரும் கிருஷ்ண பட்சம் சுக்கில பட்சம் இருபத்திநான்கில் உள்ள சதுர்த்தசிகள் நித்திய சிவராத்திரி. தை மாதம் கிருஷ்ண பட்சம் பிரதமை முதல் பதின்மூன்று நாட்கள் ஒருபொழுது உணவு கொண்டு பதினன்காம் நாள் சதுர்த்தசியில் சிவபெருமானை வழிபடுவது பட்ச சிவராத்திரி. மாசி கிருஷ்ண பட்ச சதுர்த்தசி, பங்குனி

முதல் திருதியை, சித்திரை கிருஷ்ண பட்ச அட்டமி, வைகாசி முதல் அட்டமி, ஆனி சுக்கில பட்ச சதுர்த்தி, ஆடி கிருஷ்ண பட்ச பஞ்சமி, ஆவனி சுக்கில பட்ச அட்டமி, புரட்டாசி முதல் திரயோதசி, ஐப்பசி சுக்கில பட்ச துவாதசி, கார்த்திகை முதல் பஞ்சமி, பின்வரும் அட்டமி, மார்கழி இரு பட்சங்களிலும் வரும் சதுர்த்தசிகள், தையிலே சுக்கில பட்சத்திருத்தியை இவை மாத சிவராத்திரிகள். மேலே கண்ட மாதங்களில் முறையே பிரமன், திருமால், உமாதேவி, சூரியன், உருத்திரன், குமரக் கடவுள், சந்திரன், ஆதிசேடன், இந்திரன், சரசுவதி, மனோன்மணி, நந்தி இவர்கள் சிவராத்திரி விரதம் அனுட்டித்துப் பேறு பெற்றனர் என்று புராணங்கள் கூறுகின்றன. திங்கட் கிழமையில் இரவு பகல் முழுவதும் அமாவாசை இருந்தால் அதை யோக சிவராத்திரி என்பர். ஒவ்வொரு ஆண்டிலும் மாசி கிருஷ்ணபட்சம் சதுர்த்தசியிலே வருவது மாக சிவராத்திரி அல்லது மகா சிவராத்திரி என்பது.

சிவராத்திரி விரதம் இருப்போர் சிவபூசை செய்யலாம். அல்லது சிவபூசை செய்வதைக் காணலாம். அதற்கு முன்னாள் ஒரு வேளை உணவு கொள்ள வேண்டும். சிவராத்திரி அன்று காலைக்கடன்களை முடித்துக் கொண்டு ஆலய வழிபாடு செய்த பின் சிவபூசை செய்தல் வேண்டும். கோயில், ஆற்றங்கரை, மலைச்சாரல், குருவின் விடு, நந்தவனம், தனது இல்லம் இவைகள் பூசை செய்வதற்கு ஏற்ற இடங்கள். இரவு முதல் சாமத்தில் சிவலிங்க மூர்த்தியைப் பஞ்ச கவ்வியத்தினால் அபி ஷேகம் செய்வித்து, சந்தனக்குழம்புடன் வில்வம் சாத்தி, தாமரை மலர்களால் அருச்சிக்க வேண்டும்; இரண்டாம் சாமத் தில் பஞ்சாமிர்த அபிஷேகம் செய்து சந்தனத்துடன் தாமரை மலர் சாத்தி, துளசியால் அருச்சனை செய்ய வேண்டும்; மூன்றாம் சாமத்தில் தேன் அபிஷேகம் செய்து, அரைத்த பச்சை கற்பூரத்துடன் முல்லைமலர் சாத்தி, முக்கிளை வில்வம் கொண்டு அருச்சிக்க வேண்டும்; நான்காம் சாமத்தில் கருப்பஞ்சாற்றால் அபிஷேகம் செய்து, அரைத்த குங்குமப்பூவுடன் நந்தியா வர்த்தமலர் சாத்தி, நீலோற்பலப்பூவினால் அருச்சிக்க வேண்டும். இந்த நான்கு சாமங்களிலும் தூபதீபாராதனைகள் முறையாகச்

செய்ய வேண்டும். ஊண், உறக்கம், ஒழிக்க வேண்டும். விடிந்ததும் முழுகித் தூய்மை செய்து கொண்டு ஆலய வழிபாடு செய்தபின் ஆறுநாழிகைக்குள் பாரணை பண்ண வேண்டும். அன்று பகல் முழுவதும் தூங்காமல் சிவகதைகள் கேட்டுக் காலத்தைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்வாறு சிவபூசை செய்ய முடியாதவர்கள் சிவராத்திரியன்று ஊண், உணவு ஒழித்து, சிவகதைகள் கேட்டு, சிவாலய வழிபாடு செய்து, மறுநாள் காலையில் பாரணை செய்யலாம். சிவராத்திரி இரவு பதினுன்கு நாழிகைக்குமேல் மூன்றே முக்கால் நாழிகை சிவதரிசனத்துக்கு மிகவும் உயர்ந்த காலமென்றும், அப்படிச் செய்வது மகாபுண்ணியம் என்றும் கூறுவர்.

சிவராத்திரி விரதமிருந்து பேறு பெற்ருேர் வரலாறுகள் நம் நாட்டில் பல வழங்குகின்றன. சிவராத்திரி விரதத்தால் உடல்தூய்மை, உள்ளத்தூய்மை, ஐம்புலன் ஐம்பொறி அடக்கம், ஆண்டவனிடம் ஒன்றிய பேரன்பு முதலிய நன்மைகள் ஏற்படுகின்றன. திருக்காளத்தி, திருக்கோகர்ணம் திருப்பருப்பதம் (ஸ்ரீ சைலம்) முதலிய பாடல் பெற்ற பதிகளில் மகா சிவராத்திரி விழா மிக்க சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றது. அந்நன்னுளில் முறைப்படி விரதம் அனுட்டித்து ஆண்டவன் திருவருளுக்குப் பாத்திரமாவோமாக.

வணக்கம்

# வேழமுகன் நான்மணிகள்

புலவர். திரு. ஆ. மாணிக்கவாசகன் அவர்கள்

—[(O)]—

(வெண்பா)

ஓங்காரத் தோற்றத்தின் ஒண்பொருளே! வேழமுகா!
ஆங்காரங் கொன்றென்னை ஆட்கொள்வாய்!—போங்காலம்
தண்ணந் தமிழ்பாடத் தாயே! அருள்செய்வாய்!
எண்ணம் இறைப்பாசங் கொண்டு.

(கட்டளைக் கலித்துறை)

கருவளர் ஞானக் கடையனேன் உன்றன் கழலிணையே
மருவளர் உள்ள மலரினிற் சூடித் தொழுதிடவும்
பொருவளர் கல்விக் கவிஞனுய் வையம் கருதிடநின்
உருவளர் கண்கள் உறுபொருள் வேண்டி யழுதிடுமே!

(விருத்தம்)

அத்தா! உன்னை அணைத்திடுவேன்!
அனைத்துப் பொருளும் இணைத்திடுவேன்!
முத்தா! என்னை முகம்பாராய்!
முத்த கவிதை அகந்தாராய்!
நித்தா! கையைத் திறந்திடுவாய்!
நீசன் வினையைக் கறந்திடுவாய்!
சுத்தா! மெய்யை வளர்த்திடுவாய்!
சுகம்வே றென்ன? கணபதியே!

( அகவல் )

கரிமுகம் காப்பே எரிமுகம் வெல்லும் ;
புரியருள் ஏழை உரிமகிழ் பெறுமாம் !
கரங்குவி நெஞ்சம் பரம்பெறும் தஞ்சம் ;
உரமுயர் வெய்தும் ! சிரந்தனிற் சேவடி
சூட்டிடும் கல்வி வீட்டிடும் வினையை !
வாட்டிடும் ! துன்பப் பாட்டிடும் அலைகள்
ஒட்டிடும் எம்மான் ஒண்டமிழ் இன்பே !
வேட்டிடும் காசுகள் பூட்டிடும் சிறையாம்
திறவாம் அன்பால் உறவாம் மக்கள்
புறவாம் இடத்தில் விறகாய் வீய்தல்
அறமோ ? அழகே ! அறிவே ! ஆயாய் !
சுறவே யெறியும் கடலே ! அருளாய் !
பிறந்திடத் தந்த பெருவினைக் கீழாய்
இறந்திடல் தகுமோ ? இதயந் தந்தோய் !
வையம் படைத்தாய் வகைவகை யின்பம்
உய்யக் கடையோர் ! பையத் துய்யார்
ஆசைக் கருத்தால் அசைந்து திரிந்தே
மாசை விதைத்தும் ஒசைநீர் விட்டார் !
பலவீழ் பற்றி ஆலெனப் படர்ந்த
சலவினை மரந்தான் சாதல் காட்சியாம்
கண்டிடா வண்ணம் அண்டிடா என்னைப்
பண்டிறப் பாட்டால் உண்டிடச் செய்யாய் !
பாவியேன் வந்தேன் ஆவியால் உன்னைக்
காவியன் புருக என்பும்
ஒவிய உலகில் ஒண்ணிழல் நீயே !

---

(குறிப்பு :— காவி – கட்டி)

# நீதிநெறி விளக்கம்

## உரைநடையும் ஆங்கில மொழிபெயர்ப்பும்*

பாலகவி, வயிநாகரம்
திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

[மலர் 14. இதழ் 2-ன் தொடர்ச்சி]

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறான்;
நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்தும் அலன்.

இன்று கொள்ள வேண்டியதாகிய வரிகளை நாளை வாங்கிக் கொள்ளுவதற்குப் பொறுக்க மாட்டான். குடிமக்கள் நேரில் வந்து முன் நின்று தங்கள் குறைகளைச் சொல்லி இரக்க அதைக் கேட்டு நீதியைச் செலுத்த மாட்டான். அறிவுடைய அமைச்சர் களில் ஒருவன் பின்னே வருவது பற்றிச் சொன்னானாயின் அவனைக் கண்டு பல்லைக் கடிப்பான். இவ்வரசன் வழிப் போக் கர்களைத் துன்புறுத்துகின்ற வேடனும் ஆகான் வேந்தனும் ஆகான்.

### Tyranny

He, who will not wait till tomorrow to receive the revenue that becomes due today, who will turn a deaf ear to those who appeal to him begging redress of their grievances and who will impatiently gnash his teeth when some one offers him practical and wise counsel, is not a king; he is worse than a highway robber. 30

---

* Translated by: Sri P. Mutharasu M. A., B. T., Lecturer in Tamil, Sri K. G. S. Arts College, Arulnandi Nagar, Srivaikuntam.

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப உடுத்துண்ப உண்ணு—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

முடித்தற்குரியனவாகிய மலர் முதலியவற்றை முடித்துப் பூசுதற்குரியனவாகிய களப கத்தூரிகளைப் பூசி உடுத்தற்குரியன வாகிய பட்டாடை முதலியவற்றை உடுத்து உண்ணுதற்குரியன வாகிய இனிய உணவுகளை உண்டு அழுத்தமாக மீண்டும் மீண் டும் நன்மையைத் தருகின்ற உறுதி மொழிகளைச் சொன்னாலும் அவற்றைக் காதுகளிற் கொள்ளாமல் கண்முடித் தனமாக இருப்பவன் பெருமூச்சோடு பொருந்திய பிணத்துக்கு இணை யாவான்.

## The abuse of Sovereign wealth

A king, who after decorating his head with crowns and flowers, rubbing his body with sweet scents, clothing himself in rich garments and feasting on delicious dishes, but neither lends his ears to the vigorous and reiterated counsels of the wise, nor open his eyes to see the distress of those standing before him, is but a corpse endowed with breath. 31

ஒற்றின் தெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றேள் துணையாத் தெரிதந்தும்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

ஒற்றர்களால் உண்மையைத் தெரிந்தும், மறைவிடத்தி லிருந்து கொண்டு அதனை யறிவோமென்று தனது தோள்களே துணையாக இரவு நேரங்களில் மாறுவேடம் பூண்டு விசாரித்துத் தெரிந்தும் குற்றம் முழுவதும் அறிய அரியதென்று அஞ்சு வதே செங்கோன்மை யாகும். சென்று முறையிட்டாலும் கேளாதிருப்பது அதுவன்று.

## The sovereign's justice

The justice of the king consists in not being entirely satisfied with the reports of his spies but endeavouring to find out the truth in person by proceeding to secret places in disguise under the protection of his own arms, adorned with gold (ie. unattended and alone), and in hesitating to act thereon on account of the apprehension of missing the guilty; but to refuse to listen when complaints are brought is not at all justice. 32

ஏதிலார் யாதும் புகல இறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.

நேராக நின்றுகொண்டு காக்கை வெண்ணிற முடைய தென்று சொல்வார்கள். தாயைக் கொலை செய்தல் ஏற்புடையது என்று சொல்லுபவரும் உண்டு. இவர்கள் வேறு எதைத் தான் சொல்ல மாட்டார்கள்? அயலவர்கள் எவற்றையேனும் சொல்லு வார்களாயின் அரசன் தனது பேரறிவினுல் குற்றத்தை நீக்கிக் குணத்தை அறிந்து கொள்ளுதல் வேண்டும்.

## The sovereign's wisdom

The true wisdom of a king lies in sifting the representations of others and accepting the truth while rejecting the falsehood. What else will not men say, who standing opposite to a crow, call it white? There are also men who hold that matricide is noble. 33

கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணங் கண்துயில்வ
பேரா பெருமுச் செறிந்து.

அறியாமையை யுடைய கீழ் மக்களுக்குக் கேடு கண் கூடாகத் தோன்றுமாயினும் அதிலிருந்து விலகிக் கொள்ளுதற் குரிய உணர்ச்சி உண்டாகுமோ? இல்லையே யாகும். மிகுதியான நெருப்பு தன்னை எரித்தாலும் மலைப்பாம்பு இருந்த இடத்தி னின்றும் நகராமல் பெருமூச்சுவிட்டுக் கண் துயில் கொள்ளும்.

### The nature of fools

Even though ruin be before their eyes, will fools perceive it and rouse themselves to a sense of danger? No, they will not. Though overwhelming fire surrounds them, the rock-serpents are sluggish and do not rise up from their snoring slumbers. 34

நட்புப் பிரித்தல் பகைநட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையும் ஐயுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டும் குறி.

உண்மையோடு பழகுகின்ற நண்பர்களது சிநேகத்தைப் பிரித்துப் பகையாக்குதலும் பகைவர்களை நண்பர்களாக ஆக்கிக் கொள்ளுதலும் நேர்மையாக ஒழுகுகின்ற ஒற்றர்களை இகழ்ந்து ஒதுக்குதலும் அருகிலிருப்பவர் அனைவரிடத்திலும் ஐயங் கொள் ளுதலும் தக்கவர்களாகிய சான்றோர்களது நின்று பயன் தரு வனவாகிய உறுதிமொழிகளைப் பொருட்படுத்தாது புறக் கணித்தலும் நற்குணங்களை விட்டுத் தீக்குணங்களைப் பொருந்து தலுமாகிய இவ்வாறும் பின்னே கேடு அடைய இருப்பதைக் காட்டும் அறிகுறிகளாம்.

### The evil omens of impending ruin

To estrange friends, to befriend enemies, to scoff at spies, to suspect the fidelity of one's associates, to reject the continued advice of the wise and to become changed in temperament for the worse, are indications of impending ruin. 35

—

(வளரும்)

# "பூம்பாவையார்"

புலவர். திரு. ப. நடேசன் அவர்கள்,
தமிழாசிரியர், உயர்நிலைப்பள்ளி, கரிச்சிபாளையம்
சேலம் மாவட்டம்

பெரிய புராணம் :-

பெரியர் புராணம் என்பது பெரிய புராணம் என்று வழங்கப்படுகின்றது. இதற்கு இந்நூலாசிரியர் இட்டபெயர் திருத்தொண்டர் புராணம் என்பதாகும். பெரியர் யார்? "செயற்கரிய செய்வார் பெரியர்" என்ற வாய்மொழிக்கு இணங்க செயற்கருஞ் செயல்களைச் செய்தவர்கள் ஆவார்கள். அவர்கள் தனியடியார்களாகிய சிவனடியார்கள் அறுபத்து மூவரும், தொகையடியார்கள் ஒன்பதின்மரும் ஆவர். புராணம் என்பது பழைய வரலாறு ஆகும். எனவே செயற்கருஞ் செயல்களைச் செய்த சிவனடியார்களின் பழைய வரலாறு என்பது இதன் பொருளாகும்.

பெரிய புராணம் சைவத் திருமுறைகள் பன்னிரண்டில் பன்னிரண்டாம் திருமுறையாகச் சிறந்து விளங்குகின்றது. இதன் ஆசிரியர் சேக்கிழார் பெருமானுர். இவர் தொண்டை நாட்டுக் குன்றத்தூர் என்னும் ஊரில் தோன்றினுர். இவரது இயற் பெயர் அருண்மொழித் தேவர் என்பதாகும். இவர் சேக்கிழார் குடிவிளங்கத் தோன்றிய பெருமானுதலின், அருண்மொழித் தேவருக்குச் சேக்கிழார் என்ற குடிப் பெயரே பெயராக வழங்குவதாயிற்று. இவர் அநபாய சோழரின் (இரண்டாம் குலோத்துங்கன்) அமைச்சராக இருந்தார். இவர் பன்னிரண்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் ஆவர். கவிச் சக்கரவர்த்தி கம்பர் இவர் காலத்துக்குப் பின்னர் வாழ்ந்தவர்,

பெரிய புராணம் இரண்டு காண்டங்களாக அமைந்துள்ளது காண்டங்களுக்கு ஏனையநூல்கள் போன்று தனிப்பெயர் இன்று. முதற் காண்டம் என்றும், இரண்டாம் காண்டம் என்றும் குறிக் கப்படுகின்றன. முதற் காண்டம் ஐந்து சருக்கங்களும், இரண் டாம் காண்டம் எட்டுச் சருக்கங்களும் கொண்டன. இந்நூல் 4286 செய்யுட்களைக் கொண்டது. தில்லை நடராசப் பெருமானல் "உலகெலாம்" என்று அடியெடுத்துக் கொடுக்கப் பெற்றுப் பாடப்பட்ட நூலாகும்.

இந்நூல் நவில்தொறும் நயம் பயக்கும் தன்மை உடை யது. பக்திச் சுவை ததும்புவது. ஏனைய சுவைகளையும் ஆங் காங்குக் கொண்டுள்ளது. இலக்கிய நயங்களும், காவியச் சுவைகளும் அமைந்துள்ளது. பூம்பாவையார் வ ர லா று இரண்டாம் காண்டத்தில் வம்பரு வரிவண்டுச் சருக்கத்தில் திருஞான சம்பந்த சுவாமிகள் புராணத்தின் இடையே மிகவும் அழகாகக் கூறப்படுகின்றது. அவற்றைச் சிறிது காண்போம்.

பூம்பாவையார்:— பழம் பெருமை வாய்ந்த திருமயிலா புரிப் பதியில் பெரு வணிகர் குடியில் சிவநேசர் என்னும் ஒருவர் வாழ்ந்து வந்தார். கடல் வாணிபத்துறையில் பெரு நிதி படைத்தவர் இவர். மேலும் சிவபெருமானிடத்து மெய் யடிமை பூண்டவர். செந்நெறியில் ஒழுகும் மனமுடையவர். சிவனடியார்களிடத்தில் மிக்க பேரன்புடைவர். சீர்காழியில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் ஞானப்பால் உண்டருளி யதையும் புறச்சமயங்களை இழித்தழிக்கும் செய்கைகளையும் சிவனடியார்கள் மூலம் கேட்டு மிகமகிழ்ந்து அவரது திருவடி களில் பெருங்காதல் கொண்டவர்.

இத்தகைய சிவநேசர் செல்வத்தில் சிறந்தும், புகழ்ச்சி யால் மேன்மை பெற்றும் உலகில் திகழ்ந்தாராயினும் நன் கலமாம் மக்கட் பேறு இன்றிக் கவலையுற்று வருந்தினர். பிறகு இவர் அருந்தவம் செய்து சிவனடியார்களுக்கு உரிய வழிபாடு களைச் செய்து வந்தார். அதன் பயனுய் இவரது மனைவியார் திருவயிற்றில் திருமகளைஒத்த ஒரு பெண் கொடி தோன்றினுள். மகட்பேறு பெற்றவுடன் சிவநேசர் தனது சுற்றத்தார்களுடன் சேர்ந்து நல்ல பல அறங்களைச் செய்தார். மங்கல விழாவினை

மகவு பிறந்தபின் பத்து நாட்களிலும் பெருஞ் சிறப்புடன் நடத்தினர். பின்னர் அப்பெண் மகவின் அழகு விளங்கும் பண்புகளை யெல்லாம் நோக்கி, அவை பூமகளின் பண்புகள் போன்று இருந்தமையால் 'பூம்பாவை' என்று பெயரிட்டனர். இதனைச் சேக்கிழார் பெருமான்,

"யாவரும் பெரு மகிழ்ச்சியால் இன்புறப் பயந்த
பாவை நல்லுறுப்பு அணிகிளர் பண்பெலாம் நோக்கி
பூவி னுளென வருதலின் பூம்பாவை என்றே
மேவும் நாமமும் விளம்பினர் புவியின்மேல் விளங்க"

என்று அழகாகக் கூறுகின்றார்.

பூம்பாவையார் "அசையும் மின்னற் கொடியோ! பொற் கொடியின் இளந்தளிரோ! மாணிக்கச் சுடர்க்கொழுந்தோ! அழகின் இளம் பதமோ! அணி விளக்கோ!" என்று நினைக்கும் வண்ணம் பேரழகோடு வளர்ந்து வந்தாள். தமது பருவத்திற்கு ஏற்றபடி, கழங்கு, அம்மனை முதலியவற்றை ஆடினாள். மேலும் சிறு வீடு கட்டியும், மணற்சோறு சமைத்தும், மணி ஊசல் ஆடியும்; வண்டலாட்டு அயர்ந்தாள்.

சிவநேசர் பூம்பாவைக்கு ஒத்த பண்பு இவ்வுலகில் வேறொருவருக்கும் இல்லை என்று மனத்தினால் மகிழ்ச்சியடைந்தார். எனவே "இவளை மணம் செய்து கொள்ளும் நாயகனே எனது பெருநிதி முழுமைக்கும் உரியவன்" என்று யாவரும் அறிய மொழிந்தார். அந்நாளில் திருஞான சம்பந்தர் பாண்டி நாடு சென்று, அங்குச் செய்த அருட் செயல்களை யெல்லாம் சிவநேசர் கேட்டு மகிழ்ந்து கூறுகின்றார். இதனை,

"கற்ற மாந்தர்வாழ் காழிநாடு உடையவர்க்கு அடியேன்
பெற்றெடுத்த பூம்பாவையும் பிறங்கிய நிதியும்
முற்றும் என்னையும் கொடுத்தனன் யான்என்று மொழிந்தார்"

எனச் சேக்கிழார் பெருமான் பாடுகின்றார். இவ்வாறு சிவநேசர் பூம்பாவையைப் புகலிவேந்தருக்கு உரிமையாக்கினார்.

ஒருநாள் பூம்பாவையார் தோழியர்களோடு கன்னி மாடத்தை அடுத்த பூஞ்சோலையில் முகைமலர் கொய்தாள்,

அப்போது ஒரு பாம்பு பூம்பாவையாரின் விரலில் அழுந்தக் கடித்து விட்டு மறைந்தது. பூம்பாவையை அரவு தீண்டியது ஏன்? என்பதற்கு ஒரு காரணம் கூறுகின்றார் சேக்கிழார்.

"அன்பர் இன்புறும் ஆர்வத்தின் அளித்த பாங்கல்லால்
பொன்பிறங்குநீர்ப் புகலிகா வலர்க்கிது புணராது
என்பதுட் கொண்ட பான்மை"

இவ்வாறு செய்தது என்று ஊழ்வினையைக் காரணமாகக் கூறுகின்றார்.

பின்னர் விடம் தலைக்கேற பூம்பாவையார் மனமயங்கி நிலத்தில் விழ்ந்தாள். தோழியர்கள் பூம்பாவையாரைத் தாங்கிக் கன்னி மாடத்திற்குக் கொண்டு சென்றனர். இதனை அறிந்த சிவநேசர் மனங்கலங்கி அழுதார். வீடம்தீர் வித்தையில் வல்ல பெரியோர்கள் மந்திரம், மருந்துகளால் முயன்றனர். இறுதியில் "இது விதி" என்று கைவிட்டனர்.

பிறகு சிவநேசர் "இவளைப் புகலிவேந்தருக்கு உரிமை யாக்கியமையால் நான் வருந்த வேண்டுவதில்லை" என்று தேறினர். பின்னர் இவளுடைய உடலைத் தகனம் செய்து, எலும்பையும் சாம்பரையும் ஒரு குடத்தில் இட்டுக் கன்னி மாடத்தில் கொண்டுபோய் சிறப்புச் செய்து வந்தார்.

திருஞான சம்பந்தர் ஒருநாள் திருவொற்றியூருக்கு வந்து இறைவனை வணங்கினர். இச்செய்தி சிவநேசருக்கு எட்டியது. உடனே திருமயிலாபுரிப் பதியை அழகாக அலங்கரித்தார். பின்பு திருவொற்றியூர் சென்று புகலிவேந்தரை வணங்கினர். திருஞான சம்பந்தரும் சிவநேசரது அடிமைத் திறத்தினைச் சொல்லக் கேட்டுத் திருமயிலாபுரியை அணைந்தார். திருமயிலாபுரியில் உள்ள திருக்கபாலீச்சுரம் என்னும் திருக்கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கினர். அப்போது திருஞான சம்பந்தர் சிவநேசரை நோக்கி, "உம்முடைய மகளின் எலும்பு நிறைந்த குடத்தைக் கொண்டு வருக" என்று அருளிச் செய்தார். சிவநேசரும் பிள்ளையாரை நிலமுற வணங்கிப் புறப்பட்டுச் சென்று எலும்புக் குடத்தைக் கொண்டுவந்தார்.

திருஞான சம்பந்தர் அந்த எலும்புக் குடத்தினை அருட் பார்வை செய்து, சிவனருளைத் திருவுள்ளத்துட் சிந்தித்து, "பூம்பாவாய்" என்று அப்பெண்ணின் பெயர் சொல்லி அழைத்து,

"மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்
அண்ணலா ரடியார்தமை அமுதுசெய் வித்தல்
கண்ணினாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மையாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்"

ஆனார். சிவபெருமானை வணங்கி "மட்டிட்ட புன்னை" என்று தொடங்கும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார்.

"மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்"

என்றும்

"ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்" என்றும்

"தைப்பூசம் காணாதே போதியோ பூம்பாவாய்" என்றும்

பத்துப் பாட்டு அருளிய அளவினில் பூம்பாவையார் திருமகளைப் போல் எழுந்துநின்றார். அதுகண்டு பிள்ளையாரும் திருக்கடைக்காப்பு அருளினார். பூம்பாவை எழுந்த அற்புதத்தைக் கண்டவர்கள் வியந்தனர்.

உயிர் பெற்றெழுந்த பூம்பாவையின் அழகினைச் சேக்கிழார் பெருமான் பல பாடல்களில் அழகாகப் பாடுகின்றார். சிவநேசர் புகலிவேந்தரை வணங்கித் தமது மகளைத் திருமணம் செய்தருள வேண்டும் என்று வேண்டினார். திருஞான சம்பந்தர் அதற்கு இசையவில்லை; மறுத்துவிட்டார். சிவநேசரும் தமது மகளைக் கன்னி மாடத்திலேயே வாழச் செய்தார். பூம்பாவையாரும் அவ்வாறே வாழ்ந்து இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

"வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது"

# காசிக் கலம்பகம்*

செந்தமிழ் வழங்கும் தென்னுட்டில் கோயில் கொண்டு இருக்கும் செஞ்சடைக் கடவுளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட கலம்பங்கள் பல தமிழில் உள. இவற்றிற்கு உதாரண மாகத், தில்லைக்கலம்பகம், மதுரைக் கலம்பகம், கச்சிக்கலம்பகம் திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம், முதலிவற்றைக் கூறலாம். தமிழ் வழங்காத வட நாட்டிலுள்ள காசி, கேதாரம், இந்திர நீலபருப்பதம், கோகர்ணம் ஆகிய தலங்களில் வீற்றிருக்கும் இறைவனைப் போற்றிப் பராவும் அந்தாதிகளோ, கலம்பகங் களோ தமிழில் இல்லை என்றே கூறலாம். ஆயினும் காசியில் எழுந்தருளி இருந்து அடியவர்களுக்கு முத்திக் கனியை வழங் கும் விசுவநாதப் பெருமானுக்கு, குமரகுருபரசுவாமிகளால் இயற்றப்பட்ட கலம்பகம் ஒன்றுளது. இது காசிக் கலம்பகம் என்றழைக்கப்படும்.

ஸ்ரீ குமரகுருபரர் செந்தில் முருகன் திருவருளால் உதித்த வர். எழுத்து, சொல், பொருள், யாப்பு அணியென்பனவற்றின் இலக்கணங்களை அறிந்தவர். ஆசுகவி, மதுரகவி, சித்ரகவி, வித்தார கவி இயற்றுவதில் வல்லவர். முருகப் பெருமான் மீதும், அம்பிகை மீதும், சிவன்மீதும், தேனெழுகும் தமிழால் பல பாடல்களைப் பாடியிருக்கின்ருர். இவர் காலத்தில் சைவ சமயமானது இமயம் முதல் குமரிவரை பரவியிருந்த தென்று கூறுவர். இவர் தமிழின் பால் அன்பும், பண், பரதம் முதலிய கலைகளில் விருப்புமுடையவர். அகப்பொருளிலக்கணச் செய்தி களை எடுத்தாள்வதிலும், அவ்விலக்கண அமைதி பெறச் செய் யுளமைப்பதிலும்வல்லவர். சிறப்பாக நவராத்திரிக்காலங்களிலும்

---

* இலங்கை வானெலியின் பேச்சுத் துறைத் தலைவர் திரு. அருள். தியாகராஜா அவர்கள் ஒலிபரப்பியது. இது இலங்கை வானெலி நிலையத் தாரின் அன்பனுமதியுடன் வெளியிடப் பெற்றுள்ளது.

ஏனைய காலங்களிலும் ஓதப்படும் "சகலகலாவல்லிமாலை" என்ற சரசுவதி தோத்திரம் இவரால்தான் இயற்றப்பட்டது. தமிழினிடத்தே இம்முனிவர் தெய்வத்தன்மையைக் கண்டனர். வடமொழிக்கும் உரிய மதிப்பை இம்முனிவரர் அங்கங்கே வெளிப்படுத்தத் தவறவில்லை. சிறப்பாக வேதங்களைப் பலவாறு இவர் பாராட்டியிருக்கிறார். இவரியற்றிய கந்தர் கலிவெண்பா ஒரு பாராயண நூலாகக் கருதப்பட்டு, முருகனடியார்களால் ஓதப்பட்டு வருகின்றது. கலம்பகமென்பதற்குப் பல பொருள்கள் கூறப்படினும் பலவகை மலர்களும் கலந்தமைத்த கலம்பக மாலை யென்று பொருள் கொள்வதே பொருந்தும். இனிக் காசியென்ற தலத்தைப் பற்றிச் சற்றுக் கவனிப்போம்.

காசியென்ற சொல்லைப் பலர் பலமுறை கேட்டிருப்பார்கள். அதன் பொருளைச் சிலர் அறியாதிருத்தல் கூடும். கா—தேஜஸ் அல்லது ஒளி. சி – ஸ்ரீ அல்லது திருமகள். முத்தித் திருமகள் மிக்க தேசுடன் பொலிந்து வாழ்ந்து கொண்டிருத்தலால் "காசி" என்னும் பெயர் பெற்றதென்பர்.

> "தேசொடும் பொலிந்து முத்தித் திருமகள் உறைதல் தன்னால்
> காசி யென்றுரைப்பர்."

எனவரும் காசி காண்டச் செய்யுள் இதனை வலியுறுத்தும்.

முத்தி நகரங்கள் ஏழு என்று கூறப்பட்டிருக்கின்றது. அவைகள், காசி, மாயாபுரி, அவந்தி, காஞ்சி, அயோத்தி, துவாரகை, மதுரை என்பனவாம். இவற்றுள் தலையாயது காசியாகும். இதனை,

> "காசி மாயாபுரி அவந்தி காஞ்சி மற்று
> ஓசைகொள் அயோத்தி வண் துவரை ஒப்பறும்
> ஏசிலா மதுரை என்றிசைக்கும் ஏழ்பதி
> மாசறு முத்தியை வழங்கும் என்பவே"

என்ற செய்யுளால் அறியலாம். காசிக்கு வாரணாசி என்றும் ஒரு பெயர் உண்டு. வாரணாசி என்ற பெயர் மிகப் பழங்காலத்திலேயே கலித்தொகை, மணிமேகலை, சிலப்பதிகாரம் என்னும் தமிழ் இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. மணிமேகலையில்,

"வாரணசி ஓர் மறை ஓம்பாளன்
ஆரண உபாத்தி அபஞ்சிகன் என்போன்"
"வாரணசி ஓர் மாமறை முதல்வன்
ஆரண உபாத்தி அரும்பெறல் மனைவியாள்"

என்னும் பகுதிகளால் தமிழ் மக்கள் மிகப்பல நூற்றுண்டுகளுக்கு முன்பே வாரணசியைப் பற்றி அறிந்தும் அதனோடு தொடர்பு பூண்டும் இருந்தனர், என்பது புலனாகின்றது. காசி நகரம் வரணை, அசி என்னும் இரண்டு ஆறுகளுக்கு இடையில் விளங்கும் நகரம் ஆதலின் வாரணசி என்னும் காரணப் பெயர் பெற்றது. தன்னை அடைந்தவர்களின் பாவம் நீங்கத் தடுப்பது வரணை. தன்னைச் சார்ந்து நீராடியவர்களின் பாவங்களை அறுப்பது அசி. சிவபிரான் பிரிவின்றி இடைவிடாது எழுந்தருளியிருத்தலின் இதற்கு அவிமுத்தம் என்ற பெயர் ஏற்பட்டது. அவிமுத்தம் - விடப்படாதது. தன்னை அடைந்தோர்க்குச் சிவானந்தத்தை அளிப்பதால் காசிக்கு ஆனந்தகானம் என்ற பெயரும் உண்டு. திருமுறைகளில் காசியைப் பற்றிய திருப்பதிகங்கள் காணப் படாவிட்டாலும் வாரணசி, க்ஷேத்திரக் கோவைத் திருப்பதிகங் களில் ஓர் வைப்புத் தலமாக இடம் பெற்றுள்ளது. நாவுக்கரசு சுவாமிகள், கயிலையை வணங்கச் சென்றபோது, வாரணசியை யும் விருப்போடு பணிந்து சென்றார் என்று சேக்கிழார் பெரிய புராணத்தின் கண் கூறியுள்ளார். "நாங்கள் காசிக்குப் போகப் போகிறோம்" என்று சொல்லிக் கொண்டிருந்தாலே ஓர் அசுவ மேத யாகம் செய்த பலனுண்டு. காசிமாநகரம் கல்விக்கும் கலைகளுக்கும் ஒரு காலத்தில் இருப்பிடமாய் இருந்தது. அதனால் காசியை "ஆக்ஸ்போர்ட் ஆவ் இன்டியா" (Oxford of India) என்று மேனாட்டவர்கள் அழைப்பார்கள். காசியானது மேனாட்ட வர்களாலும், இந்தியாவின் பல பாகங்களில் வசிப்பவர்களாலும் மிகவும் புகழ் பெற்ற நகரமாகவும் க்ஷேத்திரமாகவும் கருதப் பட்டு வருகின்றது. இதன் சிறப்பைக் காசிக் கலம்பக ஆசிரியர் "நகரமாய் மறைச் சிகரம் ஆனதால் மகரமாயினான் நிகரில் காசியே" என்கிறார். காசியானது மறைகள் எல்லாவற்றாலும் போற்றப்படும் மாட்சி பெற்று அவற்றின் சிகரமாகவும் திகழ்ந்து ஒப்புயர்வற்று ஒளிர்கின்றது. காசியில் எழுந்தருளி யிருக்கும் விசுவநாதருக்கு அகிலேசர் என்ற பெயரும் உண்டு.

காசியில் சென்று தம்முயிரை விடுவோர் யாவரும் சிவ சாருபம் பெறுவர் என நூல்கள் கூறும். இது பற்றியும் குமர குருபரர் தம் காசிக் கலம்பகத்தில் பெரிதும் சுவைபடக் குறிப் பிடுகின்றார். சிவசாருபம் பெறுபவர்கள், சிவபெருமானைப் போன்றே திரிநேத்திரம், திருநீறு, காளகண்டம், சதுர்ப்புஜம், மான்மழு முதலிய பல உருவ ஒப்புமைகளைப் பெறுவர். அதனால் சிவபெருமானுக்கும் சிவசாருபம் பெற்றவர்களுக்குமிடையே வேறுபாடு தெரியாமல் அடியார்கள் இடர்ப்படுவர். அங்ஙனம் நேராமற் பொருட்டு அம்பிகை விசுவநாதரின் மார்பில் தன் முலைத் தழும்புகளைப் பொறித்து வைத்து வேறு பாடு செய் தருளினள். அங்ஙனம் அம்பிகை செய்யாதிருந்திருப்பின் நாம் சிவபெருமானைக் காசியில் எவ்வாறு பிரித்து இறைஞ்சுதல் இயலும் என்கிறார். அச்செய்யுள் வருமாறு....

> "உடையாள் அகிலேசர்க்கு ஒங்கு முலைக்கோட்டின், அடையாளம்
> இட்டு வையாள் ஆனல், கடையில் அவர் செவ்வண்ணம் பெற்றார்
> திரளொடு நிற்கின்றாரை, எவ்வண்ணம் கண்டிறைஞ்சுவோம்"

ஒருவர் நோயுற்றடர்ந்து பாயிலே கிடக்கின்றபோதும், பல் விழுந்து தலைமயிர் நரைத்து மூப்பு வந்தெய்திய விடத்தும் அதனால் அவர் துன்புறாமல் இன்னும் இவருக்குப் பெருவாழ்வு கிட்டியது என்று துணிந்து மகிழ்ந்து சொல்வதற்குரிய இடம் ஒன்று உண்டு. அது காசித் தலமாகும். இதனைக் குமரகுருபரர்,

> "படுத்த பாயுடனே பிணி முழ்கினும் பல்விழுந்து நரைத்தற மூப்பினும்
> அடுத்த திங்கிவர்க்கே பெருவாழ்வெனும் அப்பெரும்பதியெப்பதி என்பீரேல்
> விடுத்துவிட்டிந்திர திருவும் புவி வெண்குடைக்குளாடு மரசாட்சியும்
> கடுத்த தும்புகளைத் தேடுவரர் காதலித்து வருந்திருக்காசியே"

சந்திரன் உலகிற்கு நல்ல குளிர்ச்சியையும், ஆனந்தத்தையும் கொடுத்தாலும், காதல் நோயால் வருந்தும் பெண்களுக்குத் துன்பத்தையே கொடுக்கிறான். சந்திரனது குளிர்ச்சியான கிரணங்களைப் பொறாமல் வெம்பிய தலைவி, விசுவேசர் தம் அடி யார்களுக்குச் சாருபம் வழங்குகையில் ஒவ்வொருவருக்கும் ஒரு கலையை உடைய பிறையை அணியத் தருகிறார். இவ்வாறு பலருக்குக் கலைகள் கொய்து கொய்து கொடுக்கவும் இந்த மதிக் கொழுந்து வளர்ந்து கொண்டேயிருக்கின்றது. குறைய

வில்லையே! என்ன வியப்பு! என்று ஒரு செய்யுளில் குறிப்பிடு கின்றார். விசுவநாதப் பெருமானது மாலை பெறுமல் வருந்தும் தலைவி யொருத்தி "இனிக் கொடிய மாலைக்காலம் வந்து விடுமே! மதிக்கொழுந்து தோன்றுமே! எனது விரக தாபம் கண்டு நம்மினத்தவர்கள் நகுவரே" என்று வருந்துகின்றாள். பின்பு ஒருவாறு தேறித் துணிவு கொன்டு அவர்கள் நகைத்தால் நமக்கு என்ன குறைவு நேரும்? நமக்குத்தான் உயிர் போய் விடும். அப்பால் காசிப்பிரானைத் தரிசித்தல் உறுதியாகும். அப்போது கொன்றை மாலையைப் பெறலாமென்று கூறித் தைரியம் கொள்கின்றாள்.

"புருமே மதிக் கொழுந்தும் புன்மாலைப்போதும்
நருமே கிளையுநகைத்தா லமக் கென்னே
உருமே யுயிர் காசி உத்தமரைக் காணத்
தருமே யப்போ திகழித் தாரும் பெறலாமே"

என்பது செய்யுள் இப்பாட்டின் ஒவ்வொரு அடியிலும் தலைவி யின் விரகதாபமும் அதனாலேற்படும் துன்பமும் ஒலிக்கின்றது. இறைவனது மாலையைப் பெறுமல் வாடும் தலைவி, தனது பாங்கியரை நோக்கி இன்னுமோரிடத்தில் பின்வருமாறு கூறு கின்றாள். "மலைபோன்ற இரண்டு நகில்களைத் தாங்குவதால் ஒடிகின்ற இடையையுடைய கொடியை நிகர்த்த என் அருமைப் பாங்கிமாரே! காசியில் குடிகொண்டிருப்பவரும், தனது உடம் பின் பாதியை உமாதேவிக்கு ஈந்த வள்ளலும், தனது புயத்தி லும் மார்பிலும் கொன்றை மாலையை அணிந்திருப்பவருமாகிய விசுவநாதப் பெருமானின் மாலையில் தேன் இருக்கிறது. அத் தேனை நுகரும் பொருட்டு அம்மாலையை வண்டுகள் மொய்க் கின்றன. "இவ்வண்டுகள் செய்த தவந்தான் என்னே" என்று கூறி இரங்குகின்றாள். இவ்வண்டுகள் செய்த தவமென்னென் றது அதனை அறிந்து அத்தவமாற்றியேனும் அவர் மாலையைப் பெறுவேனென்பது தலைவியின் உட்கருத்தாகும்.

"குன்றிரண்டு சுமந்தோசியும் கொடியன்னீரவி
முத்தங்குடி கொண்டாகம்
ஒன்றிரண்டு வடிவானர்திரள் புயத்து மார்பகத்து
முழிந்தேன் பில்கி

மின்றிரண்ட தெனப்புரளும் பொலங்கடுக்கைத்
 தாமத்தின் விரைத்தாதாடிப்
பொன்றிரண்ட தெனவிருக்கும் பொறிவண்டு
 செய்தவமென் புகலுவீரே."

தலைவி ஆற்ருமை மீதுர, விசுவநாதப் பெருமானிடம், நாரை, கிளி, அன்னம் ஆகிய பறவைகளைத் தூதாக விடுத்தா ளென்று கூறும் செய்யுள் படித்துப் படித்துப் பெரிதும் இன்புறு தற்குரிய தொன்ருகும்.

"குருகை விடுத்தாளெனக் குருகே கூருய்
 சுகத்தை விடுத்தாளென்
றருகு வளருஞ் சுகமே சென்றறையாய் நிறைநீர்
 தெரிந்து பால்
பருகு மனமே யனம் விடுத்த
 படிசென்றுரையாய் படிவருளத்
துருகு பசும் பொன் மதிற் காசி
 யுடையார் வரித்தோலுடையார்க்கே"

என் அருமையான நாரையே! நீ எனக்காகக் காசியில் எழுந்தருளியிருக்கும் விசுவேசுவரப் பெருமானிடம் சென்று யான் அணிந்திருக்கும் வளையலானது அவரை நீள நினைந்து உருகுவதால் கழன்று விழுந்ததென்றும், அதனுல் அதனை அணிவதை விட்டு விட்டேனென்று கூறுவாய்! வா இங்கே கிளிப்பிள்ளாய்! நீ அடியார்களுக்கு முத்திக் கனியை உதவும் காசி விசுவநாதப் பெருமானிடம் சென்று அவரைக் காணப் பெருமையால் என்னுடைய சுகத்தையெல்லாம் துறந்து விட்டே னென்று அவரது திருச்செவியில் சாற்றுவாய்! நீரிலிருந்து பாலைப் பிரித்துண்ணும் பெருமை வாய்ந்த அன்னமே! பசிய பொன்னுற் செய்யப்பட்ட மதில்களையுடைய காசிமாநகரில் அரசு செய் பவரும் புலித்தோலாகிய உடையை உடையவருமாகிய அகிலேச ரிடம் சென்று அவரைப் பிரிந்து வாழ்வதால், அன்னத்தைக் கூட அதாவது சோறு சாப்பிடுவதைக்கூட விட்டுவிட்டே னென்று எனது வருத்தத்தையும் எனது நிலையையும் உணர்த்து வாய்; சுந்தரமூர்த்திகள் திருவாரூரில் வீற்றிருக்கும் தியாகேச ரைப் பிரிந்திருந்தபோது இது போன்ற கருத்தையுடைய,

"பறக்குமெங் கிள்ளைகாள்! பாடுமெம் பூவைகாள்!
அறக்கன் என்னகந்தரும் அடிகளாரூரரை
மறக்கிகில்லாமையும் வளைகள் நில்லாமையும்
உறக்கமில்லாமையும் உணர்த்த வல்லீர்களே"

என்ற செய்யுளால் புலப்படுத்துகின்றார். திருமூலர் இவ்வுடம்பைக்கருவியாகக் கொண்டுதான் அரும்பெரும் காரியங்களை யெல்லாம் சாதிக்க முடியுமென்கிறார். ஆனால் வீடு பேற்றின் - கண்விருப்ப முடையவர்களோ, இவ்வுடலை ஒரு சுமையாகக் கருதுகின்றார்கள். திருவள்ளுவரும் இதனை :—

"மற்றுந் தொடர்ப்பாடெவன் கொல்பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை"

என்ற குறளால் வலியுறுத்துகின்றார். "மனத்துணையே! எனதன் வாழ்முதலே! எனக்கெய்ப்பில் வைப்பே! தினைத்துணையேனும் பொறேன் துயராக்கையின் திண்வலையே" என்றுமாணிக்கவாசக சுவாமிகள் குறையிரக்கின்றார். ஆனால் இதற்குமாறாக, முத்தியை விரும்புகின்றவர்கள் தமது உடற் சுமையை மிகவும் கருத்தாகப் போற்றிக் கொள்ளுகின்றார்கள். காசிக்குச் சென்று இறக்க விரும்புவர்கள் அதனால் முத்தி கிடைக்கும் என்பதில் நம்பிக்கை உடையவர்கள் தாம் அங்கு செல்லுந் துணையும் தமது முடைத் தலையையும் எலும்புகளையும் சாம்பலையும் காசியிலுள்ள கங்கையிற் சேர்த்தற் பொருட்டுத் தமது உடலைப் பேணிக்காத்து ஓம்புவர். காசி விசுவநாதர் மீது இவ்வாறு பக்தி செய்வதால் தமக்கு முத்தி கிட்டுமென்பது தான் இவர்களின் நம்பிக்கை.

சிக்கன வாழ்வு ஒருவர்க்கு இம்மையிலும் மறுமையிலும் பயனளிக்கவல்லது. காசிவிசுவநாதரும் சிக்கனவாழ்வை மேற்கொண்டொழுகுபவர். உலகுயிரெல்லா மீன்ற தமது தேவியாகிய விசாலாட்சியின் பால் குடும்பம் நடத்துவதற்கு இரண்டு நாழியளவு நெல் மட்டுமே கொடுத்து, அதுகொண்டு 'முப்பத்திரண்டறங்களையும் செய்க!' என்று பணித்தார். இப்படிக் கடுஞ் சிக்கனம் அதாவது உலோபித்தனம் செய்யுமிவர் கொள்ளையிடும்படி முத்திச் சரக்கறை முழுவதையுமே திறந்து கொடுத்து விடுகின்ற பெருவள்ளலாகக் காசியம்பதியில் திகழ்கின்றார்.

"கொள்ளையிடப் பலர்க்கு முத்திச் சரக்கறையைத்
திறந்து கொடுத்தும் அனந்தகோடிப்
பிள்ளைகள் பெற்றுடைய பெருமனைக் கிழத்திக்கே
குடும்பம் பேணுக என்று
உள்ளபடி இருநாழி கொடுத்து அதில் என்னுன்கு
அறமும் ஓம்புக என்ருர்
அள்ளல் வயற்காசி ஆண்டகையார்
பெருந்தகை அழகிதாமே."

இத்தகைய சிறந்த காசிக் கலம்பகத்தை ஆக்கித் தந்த குமர குருபர சுவாமிகள் காசியில் தமது இறுதி நாட்களைக் கழித்து இறைவன் திருவடி நிழலை அடைந்தார். இவரால் கங்கை நதிக்கரையில் கட்டப்பட்ட குமாரசாமி மடம், கேதார கட்டத் தில் உள்ளது. இன்றும் இது சிறந்த முறையில் பரிபாலிக்கப் பட்டு வருவதை யான் காசியில் தங்கியபோது அவதானித் துள்ளேன். இக்குமரகுருபர சுவாமிகள், மரபில் வந்த காசிவாசி ஸ்ரீ அருணந்தி தம்பிரான் சுவாமிகள் அவர்கள், குமரகுருபரர் பேரில் பல அறப்பணிகளைச் செய்து வருகின்ருர். காசி மாநகரில் சைவ சித்தாந்தத்தையும் தமிழையும் வளர்ப்பதற்கு காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தத்திற்கும், தமிழிற்கும், இரு பீடங்கள் அமைப்பதற்கு, ஸ்ரீ அருணந்தி தம்பிரான்சுவாமிகள் அவர்கள் நிதி அமைத்துக் கொடுத்து உதவியிருக்கிருர்கள்.

ஸ்ரீ குமரகுருபரரின் திருவடிகள் வாழ்க.

# ஈங்கோய் இலக்கியம்

திரு. கு. பழநிசாமி அவர்கள், M. A.
தமிழ் விரிவுரையாளர்,
Sri. K. G. S. ஆர்ட்ஸ் காலேஜ், அருள்நந்திநகர்.

## ஈங்கோய்மலையில் மனித வாழ்வு

ஈங்கோய் மலைக்காடுகளில் மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும் இல்லை. ஆனால் இயற்கைச் செல்வங்கள் அத்தனையும் செறிந்து கிடக்கின்றன. சடங்குமுறைப் பண்பாடுகளோ பிற கேளிக்கைகளோ எவையும் ஆங்கில்லை. ஆனால் சமயமெல்லாம் குடிகொள்ளும் அன்பின் விளக்கங்களும் பண்பின் தோற்றங்களும் புன்முறுவல் பூக்கின்றன. வெளிப்புற நாகரிகமும் பிற வீண் ஆரவாரங்களும் மிக்க வெற்று மனித உருவங்களை அங்கே காண முடிவதில்லை. ஆயின் அகமும் புறமும் செம்மை கொழிக்கும் தூய உள்ளம் படைத்த குறத்தியர்களை, முதுகுறவர்களைச் சூது வாதற்ற சிறு குறவர்களைக் குறவர் சிறுமியரைக் காண்கின்றோம். இவ்வெளிய மக்களின் வாழ்க்கை முறை அந்தக் குறிஞ்சி நிலத்தின் பெருமைக்கே அணிகலனாய் விளங்குகின்றது. அவர்களின் அன்பான இல்லறம் வாழ்க்கை முறை ஒப்புரவு இவைகள் அனைத்தும் நக்கீரதேவரின் நெஞ்சைக் கவர்கின்றன.

## குறவர் குடிலில் குழந்தைப் பேறு

நக்கீரதேவர் ஈங்கோய் மலையில் குறவர் குடிலில் புனிற்றுத்தாய் ஒருத்தியைக் காண்கின்றார். தாயினையும் சேயினையும் பேணுதல் செய்யும் முதுகுறத்தி ஒருத்தியினையும் காண்கின்றார். அவர் உள்ளம் அக்காட்சியினூடு ஓர் புனித நிலையைக் கண்டு களிக்கின்றது.

மிளகுக் கொடிகள் நீண்டு தொங்குகின்றன. அதற்கும் பக்கத்தில் அசலேக் கிழங்குக்கொடி வளர்ந்து கிடக்கின்றது. மெல்ல மெல்ல அசலேக்கொடி மிளகுக்கொடியைப் பற்றி அதன் மேல் படர்கின்றது. மருங்கே மரச் செறிவுகளின் இடையே குறமகள் ஒருத்தியின் குடில் ஒன்று காணப்படுகின்றது. அங்கேயிருந்து பச்சைக் குழந்தை ஒன்றின் மெல்லிய ஒலி கேட்கின்றது. சற்று அண்மையில் சென்று பார்த்தால் ஈன்ற தாயொருத்தி சோர்ந்து படுத்துக்கிடக்கின்ருள். அவள் முகத்தில் ஈன்ற உடலின் வேதனேயும் ஈன்ற பொழுது பெரிதுவக்கும் மகிழ்ச்சியும் மாறிமாறித் தோன்றுகின்றன. அவளுக்கு உணவைப்பற்றியே கவலே இல்லே. உண்ண வேட்கை இருப்பினும் உண்ணமுடியாத அளவிற்குச் சோர்வு மிகுதியாக இருக்கின்றது.

முதிய பெண்மணி ஒருத்தி அவளே நோக்கி வருகின்ருள். கையிலே வேகவைத்த அசலேக் கிழங்கு இருக்கின்றது.

"அம்மா உடம்பு எதற்காகும்? பிள்ளே பெற்ற உடம்பல்லவா? இதைச்சிறிது சாப்பிடேன்". இதனேச் சொல்லியவாறே அவ்வேழை முதுகுறத்தி தாயின் முகத்தினேயும் சேயினேயும் கண்டு கண்டு மகிழ்வுறுகின்ருள். மின்போன்ற செஞ்சடையான் குன்றில் இக்காட்சியைக் கண்டதாகக் கூறுகின்ருர் நக்கீரதேவர்.

"ஈன்ற குறமகளிர்க் கேழை முதுகுறத்தி
நான்றகறிக் கேறசலே நற்கிழங்கை—ஊன்றவைத்து
என்அன்னே உண்ணென்று எடுத்துரைக்கும் ஈங்கோயே
மின்அன்ன செஞ்சடையான் வெற்பு

### கவிதையும் கருத்தும்

இங்கே அம்முதியவளின் நெஞ்சில் ஒருவகை நிறைவு தேங்கியிருப்பதைப் போலவே இக்கவிதையின் கருத்திலும் ஒருவகை நிறைவினேக் காணலாம். வாழ்வின் முடிவை நோக்கி விரைந்து கொண்டிருக்கும் ஒரு முதியவள் தான் அனுபவித்த ஒரு நிலேயைத் தனக்குப் பின்னுல் இப்போது காண்கின்ருள். பட்டறிந்தவள் அன்போடு எல்லா உதவியினேயும் செய்கின்ருள்.

முதுமை இளமைக்கு உதவுகின்றது. வழி காட்டுகின்றது. துணை செய்கின்றது. உதவியின் தேவைநிலை ஒன்று. உதவி செய்யும் மனப்பாங்கு—செய்யக்கூடிய வசதிநிலை இவை பிறி தொன்று. இரண்டும் தனித் தனியாக இணையாமல் இருக்கும் போது எதுவுமே சிறப்பதில்லை. இரண்டும் ஒன்று சேரும் போதுதான் பெரிதினிதாகிய பேரின்பம் நிகழ்கின்றது. அன்பு, பாசம், அருள் அடிப்படையில் இப்படிப்பட்ட உதவிகளில்தான் கடவுட்காட்சி மெல்லப் புலனாகின்றது.

இறைவன் எத்தனையோ வகைகளில் உதவியின் வடிவமாகக் காட்சி தருகின்றான். தாயினது உதவியே தேவைப்பட்டபோது அவர் தாயாகவும் மாறி உதவினார் அன்றோ. அதே நினைவு தான் ஏழை முதுகுறத்தியினையும் தாயையும், சேயையும் பார்க்கும் போது நம் நினைவிற்கு வருகின்றது. நமக்குத் தாயு மானவர் கதை தெரிகின்ற போதுதான் ஈன்ற குறமகட்கு ஏழை முதியவள் அசலைக் கிழங்கை ஊட்டிக்கொண்டு மருத்துவம் பார்க்கும் நிலையில் உள்ள தெய்வநிலை ஒருவாறு புலனாகின்றது.

ஆனால் நக்கீரதேவருக்கு அதுதானே அன்றோ உயர்ந்த நிலையாய் அருள் நிலையாய்ப் புனிதக் காட்சியாய்த் தோன்றி யிருக்கின்றது. இல்லாவிட்டால் மின் அன்ன செஞ்சடையான் குன்றில் இந்தக் காட்சியைக் கண்டேன் என்று வெறுமனே கூறியிரார். அதுவெறும் இயற்கை வருணனை மட்டும் அன்று. சமுதாயக் காட்சியினையோ, குறிப்பிட்ட இனத்தின் பண் பாட்டினையோ காட்டும் குரல் மட்டுமோ அதில் கேட்கவில்லை. பரந்த அளவில் அன்பினில், பாசத்தில் அருளினில் விளையும் உதவியின் வடிவாகிய தெய்வநிலையே அங்கு தெரிகின்றது.

### விளையாட்டுப் பிள்ளைகள்

குறவர்களின் வாழ்க்கையில் இன்னும் எத்தனையோ சுவை யான நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்கின்றார் நக்கீரதேவர். குறவர் இல்லங்களில் பிறந்த குழந்தைகள் வளர்கின்றன. அத் தங்க மதலையரின் ஆட்டத்திலும் பாட்டிலும் மலைச்சாரல் மலர்ச்சி பெறுகின்றது. புலியின் குருளையை விரட்டுவதும் களிற்றை

வெருட்டும் குரலைப்பழகுவதும் அவர்கள் விளையாட்டு. ஆற்றில் திளைப்பதும் அருவியில் குளிப்பதும் அவர்கள் பொழுது போக்கு. சிறுமியர் பாடும் அம்மானைப் பாட்டும் சிறுவர்கள் பாடும் தெம் மாங்குக் கண்ணிகளும் அம்மலையில் கலந்து மயங்கும்.

இந்த விளையாட்டுப் பண்ணையின் சிறுமியர் சிலர் குடிலை நோக்கி ஓடி வருகின்றனர். குழந்தைகளின் வருகை கேட்டு வெளியே வந்து பார்க்கின்றாள் தாய் ஒருத்தி. செம்பவளவாய் இதழைத் திறந்து கேட்கின்றனர் அச்சிறுமியர். "அம்மா காய் தாருங்கள்!" என்றாள் ஒருத்தி. "ஆமாம் அம்மானை ஆடப் போகிறோம் கொடுங்கள்" என்றாள் இனனொருத்தி. கள்ளமற்ற அக்குழந்தைகளின் இச்சொற்களைக் கேட்டதும் பெற்றமனம் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கின்றது.

"அப்படியா! விளையாடவும் தெரியுமோ? இந்தாருங்கள்" என்று சொல்லிக்கொண்டே அக்குறத்தி கையில் ஒரு குச்சியை எடுத்துக் கொண்டு வீட்டின் பின்புறம் சென்று நிலத்தைக் கிளறுகிறாள். பவளங்கள் மிளர்ந்து கொண்டு வெளிவருகின்றன. தங்களது இதழ்களைப் போலவே வந்த பவழங்களைக்கண்டதும் அப்பேதையரின் உள்ளங்கள் வியப்பில் மூழ்கி விடுகின்றன.

நக்கீர தேவரின் உள்ளம் இக்காட்சியைக் கண்ட உடன் நெகிழ்ந்து விடுகின்றது. சேய்களின் குறையைத் தீர்க்கும் அத்தாயின் காட்சி — அதன் உயர்வு — அதில் அத்தாய்க்கு உள்ள எளிமை-இவைகள் அவர் நெஞ்சில் ஆழப் பதிகின்றன.

ஆம்; தன்மக்கள் மனக்குறையைத் தீர்த்துவைக்கும் இத் தாய் இலங்கும் இம்மலையில்தான் இறைவனும் இருக்கிறான். அவனே நமது பேரின்ப வேட்கையினை நிறைவேற்ற முடியும். அம்மையுமாய் அப்பனுமாய் விளங்கும் அவனது அருள் ஒன்றே அதனை எளிமையோடு நிறைவேற்ற முடியும். நமது குறைகளை —வினைச் சுழலை—மறுதலை நோயைத் தீர்க்கும் திறன் படைத்த வன் அவனே! இறைவன் மலையில் கண்ட காட்சி இந்த நம்பிக் கையினையும் தெளிவினையுமே அவருக்கு ஏற்படுத்துகின்றது. நெஞ்சம் பாடலாய் வெளிப்படுகின்றது.

அம்பவள வாய்மகளிர் அம்மனைக்குத் தம்மனையை
செம்பவளம் தாஎன்னச் சீர்க்குறத்தி—கொம்பின்
இறுதலையி லுல்கிளைக்கும் ஈங்கோயே நம்மேல்
மறுதலைநோய் தீர்ப்பான் மலை.

தேனும் தினைமாவும்

அங்கொருபக்கம் செந்தினையை நிலஉரலில் இட்டுக் குறவர் பெண்கள் குத்திக் கொண்டிருக்கின்றனர். வருத்தம் தோன்ருமல் இருக்க அவர்கள் ஒலிக்கும் உடனெலியும் விட்டு விட்டுக் கேட்டுக் கொண்டிருக் கின்றது. வேறு சிலர் தாமரைத் தாடாகங்களின் மருங்கேயுள்ள கொம்புத்தேனைத் தேடிப்பிழிந்து கொண்டு வருகின்றனர். அம்மானை ஆடியும் நீரில் திளைத்தும் பல இடங்களில் திரிந்து கொண்டிருந்த சிறுவர்கள் பகல் உணவிற்கு நேரம் ஆகிவிட்டபடியால் தாய்முகம் நோக்கி ஓடிவந்து களைப்போடு நிற்கின்றனர்.

பாலையும் நினைந்தூட்டும் பண்புள்ளவளன்ரே தாய். தனது குழந்தைகளைக் கண்டதும் அவர்களைச் சுற்றிலும் உட்காரவைத்து முன்னர்க் குத்திய தினைமாவில் கொண்டு வந்த தேனை விட்டுப் பிசைந்து சிறு சிறு உண்டைகளாக உருட்டி அவர்கள் நீட்டும் சின்னஞ்சிறு கரங்களில் வைக்கின்ருள். ஆர்வத்துடன் உண்டுசிறக்கும் அப்பிஞ்சுமுகங்களின் மகிழ்ச்சி கண்டு களிப்புறுகின்ருள்.

தனக்குப் பசியோ துன்பமோ-அதைப்பற்றிக் கவலையுருது தனது சேய்களை உண்பிப்பது தாய்மை. தனக்குத் துன்பமாயினும் குழந்தைகளின் நலத்திற்காக மருந்துண்பதுமுதல் பத்தியம் இருப்பதுவரை உள்ளஅத்தனைத் துன்பத்தையும் அலுப்பு சலிப்பன்றி ஏற்றுக் கொள்ளுவதுதான் தாய்மையின் சிறப்பு. தாய் ஒருத்திதான் இத்துணைத் துன்பத்தோடும் கைம்மாறு கருதாமல் நலஞ்செய்யவே காத்திருக்கும் தெய்வம்.

இங்கும் ஓடியாடித் திரிந்து உணவு சேகரித்துத் தனது பசியினையோ பிறவற்றையோ வேறு வகையின் தன்னைப் பற்றியோ எண்ணுமல் வேளை தவறிவிடாமல் வந்த சிறு குறவர்

கட்கு உணவளித்து அதனைக் கண்டு களித்துவக்கும் தாயினைக் காணுகின்றார் கவிஞர். இது அவருக்கு ஒன்றும் வியப்பளிக்க வில்லை. ஏன்? மைநீட்டுங்கண்டன் மலையில் அப்பண்பிற்குப் பஞ்சம் எப்படி இருக்கமுடியும்? அத்தாய்க் கருணையின் அடை யாளமாகவன்றோ உலகத்துயிர்களும் பிறரும் பிழைக்க அன்று இறைவன் தான் நஞ்சுண்டு துன்பத்தை ஏற்றுக்கொண்டு எல்லா உயிர்க்கும் நன்மை செய்தான்! அப்படிப்பட்ட கருணைக் கடல் விளங்கும் மலையில் உள்ள மனிதப் பண்பும் அதுவும், கருணைக்கும் அன்பிற்கும் உரியதான அப்படிப்பட்ட தாய்மை யைக் கண்டதில் அவர் நெஞ்சம் நிறைகின்றது.

> குறமகளிர் கூடிக் கொழுந்தினைகள் குத்தி
> நறவமாக் கஞ்சங்கள் நாடிச்—சிறுகுறவர்
> கைந்நீட்டி உண்ணக் களித்துவக்கும் ஈங்கோயே
> மைந்நீட்டும் கண்டன் மலை.

கருணையின் உருவாய் இருத்தலின் மையுண்ட கண்டன் ஆனான் இறைவன். அக்கருணையின் திருஉருவாமும் மலையில் அக் கருணையை வேறொரு வடிவத்தில் காண்பதில் அவருக்கொரு மகிழ்ச்சி. அதுவே பாட்டு.

### இசைமுரலும் ஈங்கோய்

> "காட்டில் விலங்கறியும் கைக்குழந்தை தானறியும்
> பாட்டின் சுவையதனைப் பாம்பறியும்"

என்று பாட்டின் சுவையுரைப்பார் பாரதியார். குறத்தி ஒருத்தி யின் பாடலைக்கேட்டு குரலும் கொள்ளாது நிலையினும் பெயராது பாடுபெரு கண்களும் பாடு பெற்று உறங்கும் மழகளிற்றைப் பற்றி அகநானூறு பேசுகின்றது. இறைவன் பாட்டின் சுவை யுணர்ந்து இசையில் வல்ல இருகந்தருவர்களைக் குழைகளாக்கி அணிந்திருக்கின்றான் என்று இசைக்குத் தெய்வமும் மயங்கும் என்று கூற நினைத்த கற்பனை உள்ளத்தின் தொன்மையான கருத்தும் விளங்குகின்றது.

எம்பெருமான் இசைவிரும்பியாய் இருந்ததனால்தான் அன்று இராவணனால் பிழைக்க முடிந்தது. அப்பொன்னிறத்து வெண் ணீற்றான் பொருப்பிலேதான் எங்கிருந்து வருகுவதோ-ஒலி யாவர்

செய்குவதோ எனும்படித் தீஞ்சுவைக்குரல் ஒன்று புலவரின் செவிகளை நிறைத்துப் பாய்கின்றது. செவிகளைக் கூர்மைப் படுத்திக் கொண்டு நடக்கின்றார். உச்சி வெயில். தினைக்கொல் லையில் பறவைகளின் தொல்லை இல்லை. பரணில் நின்று கொண்டு பாடிக்கொண்டிருக்கின்றாள் ஒரு குறப்பெண். இயல் பாகவே மானின் மருட்சியுடைய அவள் மானின் தோலை வேறு ஆடையாக உடுத்தியிருக்கின்றாள். இறைவன் அளித்த சாயல் போக மயில் தோகையை வேறு தலையிலே சூடியிருக்கின்றாள். நன்றாகப் புளித்த கள் பொங்கிவழிகிறது. இயற்கையிலேயே மது வெறியை உண்டாக்கும் அம்மங்கை அதனை வேறு உண்டு விட்டுப் பாடுகின்றாள். மண்ணும் விண்ணாக மாறுகின்றது.

அவள் மிடற்றிலிருந்து பிறக்கும் இன்பநாதம் ஈங்கோய் மலையில் "புல்லை நகையுறுத்திப் பூவைவியப்பாக்கி மண்ணைத் தெளிவாக்கி நீரில் மலர்ச்சி தந்து விண்ணை வெளியாக்கி" விந்தை செய்கின்றது. அதைத்தான் அழகுபடச் சொல்கின்றார்.

மரைஅதளும் ஆடும் மயில்இறகும் வேய்ந்த
புரைஇதணம் பூங்கொடியார் புக்கு—நுரைசிறந்த
இன்நறவு உண்டாடி இசைமுரலும் ஈங்கோயே
பொன்நிறவெண் நீற்றான் பொருப்பு

---

உ

சிவ சிவ

# திருக்கோவலூரில்
# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள்
# அன்னம்பாலிப்பு ரூ. 5000/-

'தத்தா நமரே காண்' என்றமிலாடுடையாராகிய மெய்ப் பொருள் நாயனுர் திருநீற்றன்பு பாதுகாத்துத் தொண்டு செய்த தும், அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்ருயதும், தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன் தம் இறுதிக் காலத்து வாழ்ந்த தலமாகியதும், அப்பரும் சம்பந்தரும் பாடிய திருப்பதிகங்கள் பெற்றதுமான திருக்கோவலூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சிவப் பேறு எய்திய திருநாள் ஆகிய வைகாசி அமரபக்ஷம் திருதியையில் அந்தணர், அருந்தவர் ஏழைகளுக்கு அன்னம் பாலித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இத் தருமம் நிறுவப்பெற்றது. இது "திருக்கோவலூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு நிதி" எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 5000/- ரூபா ஐயாயிரம். இது ஆண்டுதோறும் 3% வட்டி தரக்கூடிய அரசியல் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் எண். சிஏ. 240205- ரூ. 2000/- சிஏ. 240207- ரூ. 2000/- சிஏ. 240217- ரூ. 1000/- ஆக ரூ. 5000/- இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப் பெற்று வரும்.

3. இம் முதற் பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகையில் இத்தருமத்தை நடத்துவதற்குரிய செலவு போக எஞ்சிய தொகை முழுவதும் ஆண்டுதோறும், தென் பெண்ணை யாற்றின் தென்கரையிலுள்ள திருக்கோவலூரில் (திருக்

கோவலூரில் கீழூரில்) ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நாளாகிய வைகாசி அமர பக்ஷம் திருதியை நாளில் அந்தணர், அருந்தவர், ஏழைகளுக்கு அன்னம்பாலித்தற் பொருட்டுப் பயன் படுத்தப்பெறும்.

4. ஆண்டுதோறும் கிடைக்கும் வட்டி வருமானத்துக்கு ஏற்பவும் கால விலைக்கு ஏற்பவும் நம்மால் தயாரிக்கப்பெறும் திட்ட ஜாப்தாவின்படி இவ்வன்னம்பாலிப்பு நடத்தப்பெற்று வரும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலும் பயன்படுத்தப் பெற மாட்டாது. இம்முதற்பொருள் நம் பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும். இம்முதற்பொருள் அரசினரால் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் திரும்பவும் முதலீடு செய்யப்பெறும்.

"குழகன் கோவலூர்தனுள்
விடையதேறும் கொடியினன் வீரட் டானஞ் சேர்துமே"

Tirupanandal
Dated 6-2-1963. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

---

Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 7-2-1963 as No. 7 of 1963 of Book 4 volume 50 pages 133 to 135.

Registered With the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.

Regd No. M. 5574 குமரகுருபரன்.

| | | |
|---|---|---|
| 33 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனாட்சியம்மை குறம் | ... 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 38 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 41 | பெரியபுராணம் – உரைநடை | ... 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 48 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 49 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... 0 50 |
| 51 | மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |
| 52 | கந்தரநுபூதி-தெளிவுரையுடன் | ... 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | ... 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | ... 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 47, 48, 49) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '63.